அழகர் தமிழ் உரை

# தேசியம் வளர்த்த தமிழ்

(கா. திரவியம்)







## மேனிலை இரண்டாம் ஆண்டு

## துணைப் பாடக் கட்டுரைகள்.

தொகுத்தவர் :
புலவர் சேது. இராமலிங்கம், எம்.ஏ , பி.எட்.,
நகர மேனிலைப் பள்ளி, கும்பகோணம்,

புத்தக வியாபாரம்
அம்மன் சன்னதி
623 001.

அழகர் பதிப்பகம்
அஞ்சல் பெட்டி எண்: 51
19, ஜெ. பி. 14 மனைத்தெரு, கும்பகோணம்.

# தேசியம் வளர்த்த தமிழ்

## களம் கண்ட கவிஞர்கள்

## 1. பாரதியார்

முன்னுரை: தமிழ்க்காதல் தேசபக்தியாகி, சுதந்திர வேட்கை சமதர்மப்பற்றாகி, உயிரினங்கள் அனைத்துடனும் உறவு கொண்டு புதியதோர் உலகு படைக்க, பாட்டால் பாதை வகுத்து, தமிழ்நாட்டில் புரட்சிக்கு இலக்கிய வித்திட்டவர் பாரதியார்.

தமிழ்ப்பற்று: பன்மொழிகளில் தேர்ந்த பாரதி ''யாமறிந்த மொழிகளிலே தமிழ் மொழிபோல், இனிதாவ தெங்கும் காணோம்'' என்று தெளிந்த தீர்ப்பு வழங்கினார். 1915இல் பரலி. சு. நெல்லையப்பருக்கு எழுதிய கடிதத்தில் ''தமிழை விட மற்றொரு பாஷை சுகமாக இருப்பதைப் பார்க்கும் போது எனக்கு வருத்தமுண்டாகிறது. தமிழனை விட மற்றொரு ஜாதியான் அறிவிலும் வலிமையிலும் உயர்ந்திருப்பது எனக்கு ஸம்மதமில்லை'' என வெளிப் படுத்தினார். தமிழை வாழ்க்கை வழி, அறநெறி, இலட்சியப் பாதை என்று நம்பியதால் ''பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள் தமிழ் மொழியில் பெயர்த்தல் வேண்டும், இறவாத புகழுடைய புது நூல்கள் தமிழ் மொழியில் இயற்றல் வேண்டும்'' என்று மொழியின் வல்லமையையும் வளத்தையும் வளர்க்க அறிவுறுத்தினார்.

தாய் நாட்டுப் பற்று: தாய் நாட்டுப் பற்றாக பக்குவ மடையாத தாய்மொழிப் பற்று பயனற்றது என்பது பாரதியாரின் கருத்து ''பாருக்குள்ளே நல்ல நாடு—எங்கள் பாரதநாடு'' என்னும் பாடலில் ''ஞானத்திலே, பர மோனத்திலே, உயர் மானத்திலே, அன்னதானத்திலே உயர்ந்த நாடு'' என்று அடுக்கடுக்காய்ப் புகழ்கின்றார்.

சிந்தனை மலடாக்கப்பட்டு, செயல் முடக்கப்பட்டு, சித்தத்தை அடகு வைத்து, அடிமைப்பித்தம் தலைக்கேறி யிருந்த காலத்தில் "வேறு வேறு பாஷைகள்—கற்பாய்நீ வீட்டு வார்த்தை கற்கிலாய் போ போ போ" என்று சாடினார். வீரமும் விவேகமும் கொலுவீற்றிருந்த நாட்டில் சிறிய புழுக்களைப் போல் நெளியும் மக்களைக் கண்டு மனம் கொதித்தார். "ஆணெலாம் பெண்ணாய் அரிவைய ரெலாம் விலங்காய் மாணெலாம் பாழாகி மங்கிவிட்டதிந் நாடே" என்று ஏங்கினார்.

சுதந்திர உணர்வு: கண்ணீரால், தியாகச் செந்நீரால் வளர்க்க வேண்டிய சுதந்திரப்பயிரை "சொந்த நாட்டிற் பரர்க்கடிமை செய்தே துஞ்சிடோம்—இனி—யஞ்சிடோம்" என்று பாடி வளர்த்தார். "நொந்தபோயினும், வெந்தே மயினும் வந்தே மாதரம்" என முழங்கி ஒன்று பட்டு வாழ உணர்வூட்டினார்.

ஒருமைப்பாடு: "முப்பதுகோடி முகமுடையாள் உயிர் மொய்ம்புறவொன்றுடையாள்—இவள் செப்புமொழி பதினெட்டுடையாள் எனிற் சிந்தனை ஒன்றுடையாள்" எனக்கூறி சிந்துநதியில் சேரநாட்டுப் பெண்களுடன் சுந்தரத் தெலுங்கில் பாட்டிசைத்துத் தோணிகளோட்ட கனவு கண்டார். அனைத்து இனத்தினரும் தாயின் மணிக்கொடி யின் கீழ் அணி அணியாய்த்திரண்ட காட்சி ஒருமைப் பாட்டின் சித்திரமாகும். சாதி பேதமற்ற, எல்லாரும் இந் நாட்டு மன்னராய் வாழும் இலட்சிய பாரதத்தை உருவாக்க விழைகின்றார்.

பாரதி தீட்டிய திட்டங்கள்: பாரதியார் தேசம் உயரத் தெளிவுடன் திட்டங்கள் தீட்டினார். இரும்பை உருக்கவும், கரும்பைப் பிழியவும், ஆலைகளும் கல்விச் சாலைகளும் அமைக்கவும், முத்தெடுக்கவும், கப்பல் செய்யவும் கனவு கண்டதுடன் சந்திர மண்டலத்தியல் கண்டு தெளியவும் திட்டம் வகுத்தார். "சிங்களத் தீவினுக்கோர் பாலம் அமைப்போம்: சேதுவை மேடுறுத்தி வீதி சமைப்போம்"

என்பது அவர் கனவு. ''வங்கத்தில் ஓடிவரும் நீரின் மிகை யால், மையத்து நாடுகளில் பயிர் செய்குவோம்'' என ஆறுகளை இணைக்க வழிகாட்டினார். ''பட்டங்கள் ஆள் வதும் சட்டங்கள் செய்வதும் பாரினில் பெண்கள் நடத்த வந்தோம்'' என்னும் பாரதியின் கனவு நனவாகி விட்டது.

பாரதியின் எச்சரிக்கை: கூட்டத்தில் கூடி நின்று கூவிப் பிதற்றி நாட்டத்தில் கொள்ளாத போலி வீரர்களைக் கண்டித்த பாரதி சினத்தார் தீங்கிழைப்பர் என்பதைக் குறிப்பாகக் காட்டினார். நாட்டு விடுதலைக்குப் பாடு பட்டதுடன் தமிழ் மொழியின் விடுதலைக்கும் பாடு பட்டார். பண்டிதரிடம் சிக்கிப் பாடுபட்ட தமிழைப் பாமரர் மொழியாக்கினார்.

கவிச்சிறப்பு: தமிழ் மக்களைப் பாரதியின் கவிதைகள் ஆட்கொண்டதற்கு அவர் முழுமை பெற்ற கவி என்பதே தலையாய காரணம். பழமை, புதுமை, பொதுமை, புரட்சி, தெய்வபக்தி, தேசபக்தி முதலியன அவர் கவிதை களில் அமைந்திருந்தன. 1928இல் பாரதி கவிதைகள் பறிமுதல் செய்யப் பட்டபோது சென்னை சட்டமன்றக் கவுன்சிலில் இதனைக் கண்டிக்கும் தீர்மானம் கொண்டு வரப்பட்டு உத்தரவு ரத்து செய்யப்பட்டது கவிச்சிறப்புக்குச் சான்றாகும்.

சுருதி பேதம்: 1906இல் வேல்ஸ் இளவரசர் இந்தியா வந்தபோது ''வேல்ஸ் இளவரசர்க்கு பாரத கண்டத்தாய் நல்வரவு கூறுதல்'' என்று தலைப்பிட்டு நாற்பத்தைந்து அடிகள் கொண்ட ஆசிரியப்பா ஒன்றை எழுதியுள்ளார். அப்பாடலில் ஆங்கில ஆட்சியின் நன்மைகளை அடுக்கிக் கொண்டு போவது பாரதியாரின் தூய இசைப்பெருக்கில் ஒரு கணம் தோன்றி மறைந்த சுருதி பேதமாகும்.

முடிவுரை: பாரதி பாடல்கள் கானத்தில் கனிந்த ஞானத்தில், மொழி ஆக்கத்தில், உணர்ச்சி ஊக்கத்தில், கவிதை ஊற்றினில் கருத்தின் ஏற்றினில் சிறப்புடை யனவாம்.

# 2. பாரதிதாசன்

முன்னுரை: சமூக நீதியை நிலைநாட்டவும், சாதி சமய ஆதிக்கங்களை எதிர்த்துப் போராடவும், தம் கவித் திறனைக் காணிக்கையாக்கிய பாவேந்தர் பாரதிதாசனை நாடு நன்கறியும். தொடக்கத்தில் அவர் தேசியப் பாடல் களையும் கதர்ப்பாட்டுக்களையும் புனைந்தவர்.

பாரதிதாசனின் தேசியப்பாடல்கள்: பாரதிதாசன் 'ஜன்ம பூமியின் சிறப்பு' என்ற தலைப்பில் 'நாடு என் உயிர்' எனப் பாடியுள்ளார். 'கதர் இராட்டினப்பாட்டு' என்ற தலைப் பில் வெளியான பாரதிதாசன் பாடல் தொகுதியின் மேலட்டை 'ஓம்—வந்தேமாதரம்' என்ற வாசகங்களையும், அதன்கீழ் இராட்டினப் படத்தையும், 'ஸ்ரீ சி சுப்பிரமணிய பாரதி கவிதா மண்டலம்' என்ற வரியையும், காந்தி அடிகளின் திருவுருவப்படத்தையும் தாங்கி வந்தது. ஒத்துழையாமையின் ஒவ்வொரு தத்துவத்தையும் பற்றி இருபது சிறு நூற்களைப் பாரதிதாசன் ஆக்கி அளித்திருந் தார் என்பது அந்நூலின் முகவுரையிலிருந்து தெரிகிறது. பாரதிதாசன் தேசபக்திப் பரவசத்தில் பாடிய பாடல்கள் வீரச்சுவையுடன் அமைந்துள்ளன. சர்க்கா என்னும் சக்கரமே சக்திமிக்க ஆயுதம் எனக்கூறுகின்றார். இராட்டி னத்தில் இழைக்கும் மெல்லிய நூல், ஏகாதிபத்திய ஆட்சியை அழிக்கும் பாசக்கயிறாக வல்லது என்ற தத்துவத்தை, சுந்தரத்தமிழில் சுவைமிக்க கவிதையாக வழங்கினார்.

கதரும் கடவுளும்:

''கதரணிவீர் என்றுரைத்த காந்தியண்ணல் ஆணை—எழிற்
காந்தியண்ணல் ஆணை—அதைக்கருதிடுவீர் அது உமக்கு
நாரதனார் வீணை'' என்று பாரதிதாசன் பாடியதை வெகுசிலரே அறிவர். 'நான்மறையின் சாரம்' என்றும் கூறுகிறார்

''தீயார் துகில் பறித்துத் தீர்க்கின்றார் என் மானம்,
மாயா மலர்க்கண்ணா, வந்து துயர் தீர்த்திடுவாய்''
என்று பாஞ்சாலிக்குக் கண்ணன் அருளியதுபோல் பாரத

தேசத்தைக் காக்க 'கண்ணன் காந்தி' வந்துள்ளான் என்று காவிய நயத்தைக் கண்ணீரில் குழைத்து, சோகத்தைச் சுவையாகக் கொண்ட பஃறொடை வெண்பாவைப் பாரதி தாசன் படைத்துத் தந்தார். அண்ணல் காந்தி 'அறம் வளர்க்க வந்தோன்; வளர்க வளர்க நாம் வாழ்வு' என்று வாழ்த்திய கவிஞர் தம் தேசிய உணர்வு இறுதி வரை வளர்ச்சி யடையப் பின்னர் இடம் கொடுக்க மறுத்தது, நாட்டுக்கு இழப்பேயாகும்.

"முப்பது கோடியர் முனிவராய் வீரராய்ப்
பெற்றிடும் தேவிநீ வீறுகொள் பெற்றியாய்
கலிப்பகை வென்றே தலைநிமிர் குன்றனாய்
கடையுகம் முற்றினும் திறல்கெடாக் காளிநீ
அறமெனும் வயிரக் குலிசத் தோளுடை
அன்னைநீ வாழ்க! அன்னை நீவாழ்கவே!
வந்தேமாதரம்"

என்று நாட்டுப் பற்றில் தஞ்சம்புகுந்து, நெஞ்சம் நிமிர்ந்து, விஞ்சு தேசியம் கொஞ்சு தமிழில் கொலு வீற்றிருக்க, அன்று பாடினார் பாரதிதாசன்.

குறிக்கோள் மாற்றம்: பின்னர் பாவேந்தர் வீரம் குறையவில்லை. வேறு குறிக்கோளை நாடிச் சென்று விட்டது ஒரு போராட்டத்தில் இறுதி வெற்றி பெறும் முன்பே வேறு போராட்டங்களில் குதித்துவிட்டார் கவிஞர். அரசியல் அடிமைத்தனம் ஒழியும் முன்னே, சமுதாய அநீதி களுக்கும் சமய ஆதிக்கங்களுக்கும், சாதிக் கொடுமைகளுக் கும் பொருளாதார ஏற்றத்தாழ்வுகளுக்கும் மனிதன் அடிமை யாய் இருந்த நிலைக்கு அறைகூவல் விடுப்பதில் முனைந்து விட்டார். சுதந்திரப் போராட்ட பாசறையைவிட்டு விலகி சமுதாயப் புரட்சிப் பாசறையில் அவர் போராடத் துணிந்தது தேசியத்துக்குப் பேரிழப்பேயாகும்.

முடிவுரை: விடுதலைப் போராட்டம் முற்றுப்பெற்று வெற்றிகண்ட பின்பு ஓங்கவேண்டிய புரட்சிகளுக்கு முன் னோடியாகவும், முற்போக்கு இயக்கத்தின் முன்னணி வீர ராகவும் விளங்கிய பாரதிதாசனுக்குத் தமிழகம் என்றென் றும் கடமைப்பட்டிருக்கும்.

# 3. நாமக்கல் கவிஞர்

முன்னுரை: "கத்தியின்றி ரத்தமின்றி யுத்தமொன்று வருகுது; சத்தியத்தின் நித்தியத்தை நம்பும் யாரும் சேருவீர்" என்ற துடிப்புமிக்க பாடலுடன் தமிழ்நாட்டுக்கு அறிமுகமானவர் தேசியக்கவி நாமக்கல் இராமலிங்கம் பிள்ளை. அவர் தேசிய இயக்கத்தால் ஈர்க்கப்படு முன்பே; நாடகப் பாடல்கள் பல இயற்றி, உள்ளூரில் பெயர் பெற்றவர்.

கோகலே பரிசு: 1914ஆம் ஆண்டு தூத்துக்குடியில், நாட்டுப்பற்றை ஊட்டக்கூடிய நூறு பாடல்களைக் கும்மி சந்தத்தில் ஆக்கினால் சிறந்த பாடல் தொகுப்புக்கு ஐந்நூறு ரூபாய் பரிசு என்று அறிவித்தனர். 'நாட்டுக்கவி' என்ற தலைப்பிட்டு இராமலிங்கர் பாடல்களை அனுப்பினார். சிலேடை மூலமாக, திலகர், அரவிந்தர், காந்தி ஆகியோரைப் புகழ்ந்து பாடிய பாக்களை நீக்க இசைந்தால் பரிசளிப்ப தாகக் கூறியதை மறுத்ததால் பரிசை இழந்தார். நண்பர்கள் அப்பாடல்களை அச்சடித்து வெளியிட்டனர். அதனால் பொதுமக்கள் பாராட்டையும், சேலம் விஜயராகவாச்சாரியாரால் புலவர் பட்டத்தையும் பெற்றார்.

இராஜாஜி பாராட்டு: காந்தியடிகள் தண்டி உப்பு சத்யாக்ரக இயக்கம் தொடங்கியபோது நாமக்கல் கவிஞரின் 'கத்தியின்றி ரத்தமின்றி' என்ற பாடல் அவரை நாடறிந்த கவிஞராக்கியது வேதாரண்யம் உப்பு சத்யாக்ரகத்தின் போது வழிநடைப் பாட்டாக இப்பாடல் பாடப்பட்டது. இதனைக்கேட்ட இராஜாஜி "சுப்ரமணிய பாரதியார் இல்லாத குறையை நீக்கி விட்டீர்கள்" என்று கடிதம் எழுதிக் கவிஞரைப் பாராட்டினார்.

உரிமை வேட்கை: அடிமை வாழ்வைக்கண்டு வருந்தினார். புழுவுக்கு இருக்கும் உரிமை கூட மனிதனுக்கு இல்லாத நிலைமைகண்டு பொருமினார். அடிமைத்தனம் கொடிய பாவம். அறவாழ்வுக்கும் முரணானது என இடித்

துரைத்தார் என் நாடு என் வீடு என் உரிமை என்ற உணர்வை ஊட்டினார். ''அன்னியர் ஆள்வதில் நன்மை வந்தாலும் அடிமையின் வாழ்வது நரகம் என்னாளும்'' என எடுத்துரைத்தார். கற்பு, வீரம், அறம், பண்பு அனைத்துக்கும் சிகரமாக தேசியக் கொடியை இலட்சியக்கண் கண்டு போற்றினார். ''பாரத நாடென்றன் பாட்டன் தன்சொத்து பட்டயத்துக்கென்ன வீண்பஞ்சாயத்து'' என்று உணர்வூட்டினார். ''சுதந்தரம் இலா ஒரு நாடு சூழ் புலி பேய் மிகும் பெருங்காடு'' என்று சுட்டிக் காட்டினார்.

சமுதாயப் புரட்சி: சுதந்தரம் ஒரு முடிவன்று; ஒரு தொடக்கமே மக்கள் கடமையின் அடிப்படையில் உரிமை பெற, தொண்டின் அடிப்படையில் தலைமை பூண, குடிமக்கள் தங்களைப் பக்குவப்படுத்திக்கொள்ள படிப்பினை புகட்டினார் சுதந்தரம் சமதர்மத்திற்கு அடிகோல வேண்டும் என்று கூறினார். கவிஞர் காந்திய நெறியில் சமுதாயப் புரட்சி கண்டார். ''புரட்சி என்னும் சொல்லின் பொருளிலும் புரட்சி வேண்டுமடா'' எனப்பாடினார். அடிமைத்தனம் நீங்கிய பின்னும் நம்மிடையே மிகுந்த சீர்கேடுகள், ஒழுக்கச் சிதைவுகள், எண்ணச் சிறுமைகள் ஆகியவற்றைக் களைய வேண்டுமென அறிவுறுத்தினார். ''சத்தியம் நம்மிற் குறைந்ததால் - பல சங்கடம் வந்து நிறைந்ததே'' என்று பாடினார்.

குறைபாடுகள்: நாமக்கல்லார் பாடல்களில் சொல்லாட்சியில் பல குறைகளும் கொச்சை வழக்குகளும் குறுக்கிடுகின்றன என்று குறைகூறுவோர் உண்டு எதுகை மோனையை நாடியும், சந்தத்தின் சாக்கிலும், ஏற்பில்லாத சொற்களை இழுத்துப்போட்டு நிரவல் செய்துள்ளார் என்று நிந்தனை சொல்லப்படுகிறது 'பாரத' என்ற சொல்லுக்கு ஏற்ப வாரவர் போறவர் என்ற வழக்கை வலுக்கட்டாயமாக வரவழைக்கிறார். 'எவரொரு பேர்க்கும்' என்ற சொல்லை ஊடுருவல் செய்கிறார். 'ஜனங்கள், இங்கிலீஷ்காரர், எஜமான், கியாதி முதலிய சொற்களை அடிக்கடி பயன்படுத்துகின்றார். முதல் வரியில் வீடு

என்று முடித்ததால் அடுத்த வரியில் ஜோடு என அமைத்திருப்பது சிறப்பானதன்று வேணும் என்னும் கொச்சை வழக்கும், சல்லாப வாழ்வு என்னும பொல்லாத சொல்லும் பயன்படுத்தப்படுகின்றன. இக்குறைகளைக் கொண்டு கவிதைச் சிறப்பைக் குறைத்துக் கூறலாகாது.

சிறப்புகள்: நாமக்கல்லார் பாடல்கள் உணர்ச்சிக்கு உண்மை மெருகளிக்க எழுந்தவை. அவை பொழுதுப் பாடல்கள் அல்ல; எல்லாக்காலத்திலும் ஊன்றி நிற்கும் விழுதுப்பாடல்கள். அவர் சொல்லில் கடுமை இல்லை; கனிவு இருந்தது எள்ளல் இல்லை; கவிதைத்துள்ளல் இருந்தது. அவர் கவிதை வெறும் வாய்வீச்சன்று; வாய்மையின் உயிர் மூச்சு.

முடிவுரை: நாமக்கல்லார் கல்லார்க்கும் உரிய கவி; எல்லார்க்கும் ஏற்ற இனியகவி. அவர் ஏட்டுக் கவியல்ல; எழுச்சிக்கவி; இதயக்கவி; இலட்சியக்கவி; நம்முடைய நாட்டுக்கவி

---

## 4. தேசிகவிநாயகம் பிள்ளை

முன்னுரை:

"உள்ளத்துள்ளது கவிதை — இன்பம்
உருவெடுப்பது கவிதை
தெள்ளத் தெளிந்த தமிழில் — உண்மை
தெரிந்துரைப்பது கவிதை"

என்று கவிதைக்கு இலக்கணம் வகுத்துத் தந்தார் கவிமணி. அவருடைய கவிதைகளே இந்நியதிக்கு எடுத்துக்காட்டாம். கவிமணியைத் தேசிய கவி எனக்கூறல் இயலாது. அவர் படைப்புகளில் நயமான நாட்டுப் பாடல்கள் இடம் பெற்றிருப்பினும், சுதந்திர வேட்கை அடிநாதமாக அமையவில்லை. சுதந்திரப் போராட்டத்தில் நேரடியாகப் பங்கு கொள்ளும் வாய்ப்பில்லாமல் சுதேச சமஸ்தான ஊழியராகப் பணியாற்றிய நிலை இதற்குப் பெருமளவு காரணமாய் இருக்கலாம்.

மன்னவர்க்குப் பாராட்டு: எட்டாம் எட்வர்டு அரசராகப் பின்னர் பட்டம் சூடிய வேல்ஸ் இளவரசர் இந்தியாவிற்கு 1911இல் வருகை புரிந்த போது கவிமணி, சங்ககாலப் பிற்காலப் புலவர்கள் கொற்றவனுக்குத் துதிபாடிய பெற்றியில் வாழ்த்துப் பாடினார். அப்பாடலில் நயமிருப் பினும் நாட்டுப் பற்றில்லை. செல்வாக்குக்குப் பணிந்து பாடிய சீட்டுக் கவியாக அமைந்து விட்டது "பாற்கடலில் உதித்தெழுந்த பாக்கியமே, தனி முதலைத் தொழுதடைந்த தவப்பயனே" என்று வேல்ஸ் இளவரசரைப் பாடும் வாழ்த்து நாட்டில் பொங்கி வழிந்த உரிமை உணர்வைப் புறக்கணித்துப் பாடப்பெற்ற முழுமை பெறாத கவிதை யாம். அவர் கவித்திறன் சுதந்திர எழுச்சிக்குப் பயன்பட வில்லை என்ற வருத்தம் சிலருக்கேனும் உண்டு.

தேசியப் பாடல்கள்: அவர் பாடியுள்ள ஒரு சில தேசியப் பாடல்களில் அவருடைய முத்திரை தெளிவாகப் பதிந் துள்ளது. கொஞ்சு மொழியில், களி மிஞ்சுவதோடு, கருத்தும் எஞ்சி நிற்கிறது. "கலியுகக்கண்ணன் கருணாகரன் அந்தக் காந்திமகான் வாழ்த்தியெடுத்த கொடி" என தேசக் கொடியின் சிறப்பைப் பாடுகின்றார்.

கதரின் சிறப்பு: கதர் விற்பனை என்ற தலைப்பில் அவர் எழுதிய பாடலில் தேசிய உணர்வும், ஏழை மக்களிடம் கொண்டிருந்த ஆழ்ந்த பரிவும் புலனாகின்றன.

"நல்லசரக்கு சீமைச் சரக்கென்றுநீர் — இந்த
நாட்டுச் சரக்கைப் பழிக்கலாமோ
மெல்லிய பூவாடை நெய்து தருவோம் — உங்கள்
மேலான ஆதரவே வேண்டுமையா".

என்ற ஏழைப் பெண்ணின் வேண்டு கோளாகப் பாடு கின்றார். இயந்திரங்கள் ஆலைகள் போலன்றி பசலை அழாதபடி பால் கொடுக்க வேண்டி பாடுபடும் ஏழையரைக் காக்க "கதரை வாங்குங்கள், கதி மோட்சம் தாருங்கள்" எனப் பாடுகின்றார் பஞ்சினில் பிஞ்சு உள்ளத்தைப் புகுத்தி, நெஞ்சுருக நைந்து, பாடலில் கெஞ்சுகின்றார்.

"நூறு பேருக்கு அன்னம் நிதமளித்த பலன் — இந்த நூலாடை கட்டுபவர்க்கு உண்டே ஐயா'' என்று கதரின் சிறப்பைப் புலப்படுத்துகின்றார்.

பாடலின் சிறப்பு: காசு பணம் இல்லாத ஏழைகளுக்காக காந்திமகான் போற்றும் கதர், மேலைச் சீமையையும் நடுக்குறச் செய்யும் என்று எடுத்துக்காட்டி இராட்டினத்தை அரசியல் ஆயுதமாகச் சுழற்றினார் கவிமணி கதராடை ஏகாதிபத்தியத்தை முறிக்கும் சக்தி படைத்தது என்று கூறுகிறார். சுதந்திரம் பெற்றவுடன் சுகவாழ்வு தானாகத் தழைத்து விடாது; ஆக்கம் பெற வேண்டுமெனில் ஊக்கமும் உழைப்பும் ஓயாது பேண வேண்டும் நெற்றி வியர்வை நிதமும் நிலத்தில் வீழ, நேர்மையாக உழைப்பதே சற்றும் வாடாமல் சுதந்திரம் தழைக்கச் செய்யும் வழி என்றும் வலியுறுத்தினார்

முடிவுரை: விடுதலை வேட்கை கவிமணியைப் பூரணமாக ஆட்கொள்ளவில்லை. முழுக்க முழுக்க தேசிய உணர்வு ஓங்கி நிற்கும் கவிதைகளைப் பெருமளவில் அவர் பாடவில்லை; எனினும் எழுச்சியூட்டும் தேசியப் பாடல்கள் சிலவற்றைப் பாடிய கவிமணியின் தொண்டு சிறப்பானதே யாகும்.

## 5. வ. உ. சிதம்பரனார்

முன்னுரை: தம் வாழ்க்கையையே ஒரு தியாகக் காவியமாகப் படைத்த வீரர் வ. உ. சிதம்பரனார், கவிதை புனையும் ஆற்றல் பெற்றிருந்தார். அவருடைய 'தற்சரிதை' அகவற்பாவால் ஆக்கப்பட்டது. அதில் இலக்கிய அழகும் இலட்சிய ஆழமும் காணப்படுகின்றன.

நூல் வெளியீடு: தற்சரிதையின் முதல் பகுதி வ. உ. சி சிறைக்கோட்டத்தில் இருந்தபோது ஆக்கப்பட்டது. பழம் பெரும் தேசபக்தர் பரலி. சு. நெல்லையப்பரின் வேண்டு

கோளுக்கிணங்க, முதற்பகுதி 'லோகோபகாரி'யிலும், இரண்டாம் பகுதி 'காந்தி' இதழிலும் வெளிவந்தன.

சொற் சுருக்கம் :

"பாலர் மீள்தினம் பாரும் மீள்தினம்
சிலர் யாவரும் சேர்வோம் அத்தினம்"

என்று விபின் சந்திரபாலரின் விடுதலையைக் குறிப்பிட்டார். விஞ்சுதுரை இதமாக அழைத்து நயமாகவும் பயமாகவும் உரையாடியதை "தேனும் தீயும் சேர்ந்த தொக்கும்" என்று உணர்ச்சிப் பெருக்குடன் கூறினார்.

கொதிப்பும் கோபமும்: நஞ்சின் உருவகமான விஞ்சு வழக்கினை வேறு மன்றத்திற்கு மாற்றியதை மனக்கொதிப் புடன் குறிப்பிடுகிறார். சிறையிலிருந்த வ. உ. சிக்கு, உணவு அனுப்பிய நண்பர் சிறையில் தள்ளப்பட்டதை "கொடுத்தனன் உணவு கொஞ்சநாள், அதனைத் தடுத்திட அவனைத் தள்ளினன் சிறையுள், நாளைக் கழித்திட நாய்த் தொழில் புரியும் பாளையங்கோட்டைப்பாவி இன்ஸ்பெக் டர்" என்று கோபக்கனல் பறக்கப் பாடினார்.

நகைச்சுவை: சிறையிலிருந்து நீதிமன்றத்திற்கு விசா ரணைக்காக வ.உ.சி அழைத்துச்செல்லப்படும்போது உடன் வந்த அதிகாரிகளைக்கண்ட காவலர் 'சலியூட்டு' செய்தனர் இதனைத் தம்மைக்கண்டு மரியாதை செலுத்தியாக வ. உ. சியும் சிவமும் ஏற்றுக்கொண்டதாக நகைச்சுவை தோன்றப் பாடியுள்ளார்.

விசாரணை நாடகம்: அரசு குற்றம் சாட்ட, அலுவலர் அதை விசாரிக்க, அதிகாரிகளே தீர்ப்புக்கூறும் நிலையில் நீதி கிட்டுமா? என்று சிதம்பரனார் விசாரணை நாட கத்தை நொந்து கூறுகின்றார். "முடிவினில் பின்னி முடி விலா எமக்கு முடிவிலும் தீர்ப்பை பொழிந்திட" எனக் கூறும் வரிகளில் தாம் செய்யும் தியாகச் சிறப்பை "முடி விலா எமக்கு" என்னும் தொடராலும், அந்த வழக்கு என்று தொடங்கப்பட்டதோ அன்றே தீர்ப்பு முடிவாகி விட்டது என்பதை "முடிவிலும் தீர்ப்பை மொழிந்திட"

என்னும் தொடராலும் விளக்குகின்றனர் வழங்கப்பட்ட தண்டனையை இறைவனின் பரிசு என ஏற்கிறார்.

சிறையின் கொடுமை: சிறையில் சிறுமை செய்வதற்காகத் தரப்பெற்ற சட்டை, குல்லாய் முதலிய உடைகளையும், வலது காலுக்கு விலங்கு பூட்டப்பட்டதையும், சாப்பாட்டு வேளைக்குச் சட்டியும், கலயமும் தந்ததையும் வ.உ.சி குறிப்பிடுகிறார் கைதோல் உரிய சணல் கிழி, இயந்திரத்தைச் சுற்றி, பின்னர் கால்தோல் கிழிய செக்கினைச் சுற்றியதையும் குறிப்பிடுகிறார்.

விடுதலை: 1912 டிசம்பரில் விடுதலை அடைந்ததை "விடடைந்தேன் மாண் விடடைந்தேனே" எனப்படுவதுடன் தற்சரிதை முடிகிறது. நாடு விடுதலையடைந்த போது அவர் இல்லையெனினும் அவர் தியாகமும் உணர்வும் நம் உள்ளத்தை ஆட்கொள்கின்றன.

குறைகள்: அவர் கவிதைகளில், அப்ஸ்டெயரிஸ், ஆர்டர்கள், கமிற்றல், ஆப்பிற்றல், கான்விக்கு வார்டர், மீற்றிங் போன்ற ஆங்கிலச் சொற்களைப் பயன்படுத்தியிருப்பது உணர்வை உறுத்தச்செய்கிறது.

முடிவுரை: ஆயினும், தூய்மை, கனிவு, பக்தி ஒளி முதலியவற்றால் தமிழன்னைக்கு வ. உ. சி காணிக்கையாக்கிய கதம்ப மலராயும் அழகுக்கு அழகு செய்யும் அணியாக அமைந்துள்ளது. கண்ணீரால் எழுதப்பட்ட இக்காவியம் தியாக முத்திரையைத் தாங்கி, தூய தேசபக்திச் சாசனமாக வ.உ. சியின் நிலையான தேசத் தொண்டையும் தமிழ்த் தொண்டையும் வாழ்த்துகின்றது. தமிழ் இனம் தலைவணங்கிப் போற்றுகிறது.

# 6. ஜீவா

முன்னுரை: தமிழ் நாட்டினரால் 'ஜீவா' என்று செல்லமாக அழைக்கப்பட்ட ப ஜீவானந்தம் பாரதி பாதையைப் பின்பற்றி, பாமரர்கள் எழுச்சிபெறப் பாடல்கள் பாடினார். பாரதியார் கவிதைகள் ஆன்மீக அடிப்படையில் அமைந்திருந்தன. ஜீவாவின் பாடல்கள் மனிதனை மையப்பொருளாகக் கொண்டு அமைந்தன. சுரண்டலற்ற சமதர்ம சமுதாயத்தைச் சமைக்க அவர் பாடல்கள் அறைகூவல் விடுத்தன.

உணர்ச்சிப் பாக்கள்: 1935இல் கோவையில் ஸ்டேன்ஸ் ஆலையில் வேலை நிறுத்தம் நடந்தபோது, தொழிலாளர் கூட்டம் நடைபெறுவதற்கு ஒரு மணி நேரத்திற்கு முன்பு ஜீவா வரைந்த "காலுக்குச் செருப்புமில்லை கால் வயிற்றுக் கூழுமில்லை, பாழுக்குழைத்தோமடா — என்தோழனே பசையற்றுப் போனோமடா" என்று பாட்டாளியின் பரிதாப நிலையைக் காட்டும் பாடலும் "பாலின்றிப் பிள்ளை அழும் பட்டினியால் தாயழுவாள் வேலையின்றி நாமழுவோம் — என் தோழனே வீடுமுச்சூடும் அழும்" என்று வறுமையைக் காட்டும் பாடலும் புரட்சி உணர்வைத் தூண்டுகின்றன. "நானோர் தொழிலாளி — ஒரு நாய்க்குறும் சுகமேனும் வாய்க்கும் வழியில்லை" எனத் தொடங்கும் ஜீவாவின் பாடலை கலைஞர் டி கே. சண்முகம் 'பதி பக்தி' நாடகத்தில் பாடியபோது மக்கள் மெய்சிலிர்த்தனர்.

தேசிய விடுதலைப் பாடல்கள்: சமதர்மத்தை நிலை நாட்ட முதலில் சுதந்திரம் எய்த வேண்டும் என்று சுட்டிக் காட்ட விரும்பி "தேசம் சுதந்திரம் பெறலாகாதா — எங்கள் இந்திய தேசம்" போன்ற பாடல்களைப் பாடினார். "பூரண சுயேச்சை நம் தேசம் எய்திடுமாறு போர்முரசடிக்க வேண்டும்" என்று முழங்கினார். காங்கிரஸ் கொடிக்கீழ் பாங்கொடு நீயும் கச்சையை உரிந்து கட்டி நில்றே தோழா" என தரித்திரத்தையும், அடிமையையும் அகற்ற அழைத்தார். "என்றைக்குச் சிவகிருபை வருமோ" என்ற

மெட்டில் ''என்றைக்குச் சுதந்திரம் வருமோ — ஏழை இந்தியர் துயரங்கள் அறுமோ'' எனப்பாடினார்.

சமுதாய மறுமலர்ச்சிக் கவிஞர்: அந்நிய ஆதிக்கத்தால் மட்டும் ஏற்பட்டதன்று அடிமைத்தனமென்பதையும், சமயத்தின் பேரால் பல சழக்குகளுக்கும், மதங்களின் பெயரால் பல மாச்சரியங்களுக்கும் மூடநம்பிக்கைகளுக்கும் மக்கள் அடிமையாகிவிட்டனர் என்பதை அம்பலப் படுத்தினார். ''நல்லாரை உழைப்போரைப் பறையர் என்றார் நயவஞ்சகமுடையோர் மேற்சாதியென்றார்'' என்ற பாடலில் அடிமைநிலைக்கு மூலகாரணங்களை அவர் மொழிகின்றார். ''சாமிகள் மதங்கள் இருந்தென்ன! — ஒரு சர்க்காரும் மலை போல் இருந்தென்ன?'' என சமயமும் சர்க்காரும் சுயமரியாதையைச் சூறையாடியதைச் சுட்டெரிக்கின்றார். ''கொள்ளைச் சிரிப்பு'' என்ற கோபச் சிரிப்புப் பாடலில் குழவிக்கல் சாமியென்று கும்பிட்டதையும், பிள்ளை வரம் பெற அரசு வேப்ப மரம் சுற்றியதையும் கண்டு எள்ளி நகைக்கின்றார்

பழைய மெட்டில் புதிய பாடல்கள்: ''சொல்லும் நா நமச்சிவாயமே'' என்ற மெட்டில் ''சொல்லும் நா சமதர்மமே'' எனப் பாடினார். எம். கே. தியாகராச பாகவதர் பாடிய ''சிவபெருமான் கிருபை வேண்டும்'' என்ற பாடல் மெட்டில் ''பொதுவுடமை பெறவேண்டும் – உடன் புரட்சி செய்திட வேண்டும் – வேறென்ன வேண்டும்'' என்று பாடிய பாடல் அரசியல் கூட்டங்களில் ஒரு சலசலப்பை உண்டு பண்ணியது. ''வெளுத்ததெல்லாம் பாலுமல்ல இந்தியாவே – வெளி வேஷமெல்லாம் உண்மையல்ல, இந்தியாவே, என்ற 'இந்தியா கண்ணிகள்' இராமலிங்கரின் வெண்ணிலாக்கண்ணி மெட்டில் தொடுக்கப்பட்டன.

முடிவுரை: இவ்வாறு நாடறிந்த மெட்டுக்களில் நல்ல புதுக் கருத்துக்களைப் பொருந்தி, எளிய சொற்களில் ஏற்றமிகு எண்ணங்களைப் பூட்டி, வலுவான நடையில் வளமான உணர்வைப் புகுத்தி, துடிப்புமிக்க பாடல்களை வடித்துத்தந்த ஜீவா, தமிழுக்கும் தேசியத்துக்கும், தன்மானத்துக்கும் பொதுவுடைமைக்கும், தலையாய தொண்டாற்றியுள்ளார்.

# 7. திரு. வி. கல்யாணசுந்தரனார்

முன்னுரை: சீரான கருத்துக்களைச் செம்மையான தமிழில் பெய்து, பேச்சிலும் எழுத்திலும் சிறப்பான பாணி வகுத்துக் கொண்டவர் திரு வி. க "மனம் இயற்கையொடு கலந்து விரைந்து மகிழ்ச்சியுடன் வெளிப்படுவது பாட்டு" என்று பாடலின் இலக்கணத்தைக் கூறிய திரு.வி.க. பல பாடல்களை அவ்வப்போது பாடியுள்ளார்.

சுதந்திர தெய்வம்: 1931இல் உரிமை வேட்கை அல்லது நாட்டுப் பாடல் என்னும் தலைப்பில் அவர் கவிதைகளில் சில வெளியாயின. "சாதி நிற மொழி நாடு சமய வெறிச் சண்டையெலாந் தாண்டித் தாண்டி நீதியிலே விளங்குகின்ற நின்மலம்" என்று சன்மார்க்க மலர் கொண்டு சுதந்திர தெய்வத்தைப் போற்றுகின்றார். 'பாரத நாடு' என்ற பாடலில் வாழையடி வாழையாக வந்த வரலாற்றுச் சிறப்பை வகையாகக் கூறி "வானவரும் தொழுதேத்தும் வளம் பெருகு நாடு வாழ்விழந்தே இது காலை வாடுகின்ற நாடு" என்று அவல நிலையினின்று எழுச்சி பெற விழைவைத் தெரிவிக்கின்றார்.

அன்னையின் அழுகுரல்: "தாயின் காட்சி" என்ற பாடல் இந்தியத்தாய் தன் இழிநிலை கண்டு ஏங்கிப் புலம்பும் தவிப்புப் பாடல். ஜப்பான், அமெரிக்கா, ஜெர்மன், பிரான்சு போன்ற எல்லா நாட்டுத் தேவிகளும் ஏற்றமுடன் கொலு வீற்றிருக்கின்றனர். ஆங்கிலேய அணங்கு "என்னாட்சி கதிர் மறைதல் எப்பொழுது மில்லை" என்று ஆணவத்துடன் கூறுகிறாள். இந்தியன் அந்த அவையில் "எங்கே என் தாய்" என்று ஏங்கிப் புலம்ப அன்னையின் அழுகுரல் எதிரொலிக்கிறது.

"இங்கேயென் பழங்கதைகள் இயம்புவதாலென்ன?
என்னிலையோ நிர்வாணம்; எச்சபையார் ஏற்பர்"

எனக்கூறி சாதி, தீண்டாமை, பெண்ணடிமை முதலிய கொடுமைகளால் சீர்குலைந்ததாகக் குறிப்பிடுகின்றனர்.

கவிஞரின் அழைப்பு:

''செம்மை வினை ஆற்றுதற்குச் சேரவாரும்;
தீண்டாமை பெண்ணடிமை சிறுமைச் சாதி
வெம்மைதரு நோய் களைய விரைந்து வாரும்
விழுமிய சுதேசியத்தை விதைக்க வாரும்''

என்று அன்புடன் அழைக்கிறார். 'சுதந்திர நாமாவளி' என்ற கதம்பக் கண்ணியிலும் ''சாதிப்பேயை ஓட்டுவமே சமநிலையை எங்கும் நாட்டுவமே'' என்கிறார். ''சுதந்திர வாழ்வே சுவை வாழ்வு அல்லாத வாழ்வெல்லாம் அவ வாழ்வு'' என்று அரசியல் நெறியை அறிவுறுத்துகிறார்.

கவிச் சிறப்புகள்: தூய்மை வழுவாத நடை; துடிப்பு மிக்க பாடல்; வேதனையிலும் வெறுப்புக்கு இடம்தராத, ஆத்திரத்திலும் அமைதி குலையாத தன்மை; கருத்துக் களில் திண்மை; சொல்லில் மென்மை; அழுத்தமான உணர்ச்சிகளையும் அடக்கமான பாணியில் வெளியிடல்; பண்பு பிசகாமல் பகைவரைச்சாடல் முதலியன இவருடைய பாடல்களின் சிறப்புக்களாம்.

முடிவுரை: பெருந்தன்மை, தண்மை, இனிமை, விவேகம் முதலிய இனிய பண்புகள் பொருந்தி அறம் ஆட்சி செலுத்தி, அன்பு ஆட்கொள்ளும் ஆர்வமிக்க தேசியப் பாடல்கள் மூலம் திரு.வி.க. மக்களின் மனச் சான்றினை மலரச் செய்தார்.

## 8. பண்டித அசலாம்பிகையார்

முன்னுரை: பண்டித அசலாம்பிகை அம்மையார் பண்டைக்கால மரபுக்கேற்ப, பாக்களையாத்து காந்தியடி களை நூற்றலைவராகக்கொண்டு காந்தி புராணத்தைப் படைத்துள்ளார். அந்நூல் மிகச் சிறப்புடையதாகும்.

கவிதை அமைப்பு: ''மெய்ந் நூல் ஓதி, மெய்யுணர்வு பெற்ற மெய்யராகிய காந்தியடிகளை முதலாகக்கொண்ட

முதல் நூல் இது'' என இந்நூலின் முன்னுரையில் திரு. வி.க. பாராட்டுகின்றார். ''சாந்தி என்பதன் தன் வடிவாகிய காந்தி மாதவனார் கதை சாற்றிடப் ''புகுந்ததாகக் காப்புச் செய்யுள் தொடங்குகிறது. சந்த நயமிக்க இந்நூலில் ''நீதி நேயனை. நித்திய உண்மையே ஓதும் வாயனை, ஒண்டவ வேந்தனை, ஏதம் தீர்க்கும் இனியனை'' என்றும் ''சாந்தி மாமலரின் தனி வாசமாம் காந்தி மாதவனை'' என்றும், காந்தி மகானைப் புகழும் அடிகள் அடிக்கடி வருகின்றன.

புராணச் சாயல்: இந்நூலில் பழைய புராணங்களின் சார்பும் சாயலும் பலவிடங்களில் பதிந்துள்ளன. தென்னாப்பிரிக்க அறப்போரில் வென்று திரும்பிய அடிகளை இந்தியா வரவேற்றதை ''தசரசராமன் தன்னை அன்பினில் வரவுகண்ட அயோத்தி'' எனக் குறிப்பிடுகின்றார். தென்னாப்பிரிக்காவில் அடிகள் பட்ட துன்பங்களை ''ஆலவாய் அரனார் வந்தி ஆளென வாலிற நாள் முன்கோலும் மண் வெட்டி கொண்டு குளிர்புனல் அடைக்கவந்த சீலம் போலும்'' என்று ஒப்புவமை காண்கிறார். ஆங்கிலேயர் பாஞ்சாலத்தில் செய்த கொடுமைகளை ''பாஞ்சாலி அருந் துகில் உரிந்த'' கதையை ஒப்பிட்டுப் பாடுகிறார். நீதி மன்றத்தில் குற்றவாளிக் கூண்டில் நிற்க அருகில் அன்னை கஸ்தூரிபாவும், கவியரசி சரோஜினியும் சாரளா தேவியும் இருந்த காட்சியை ''உமையினோடு ஒளிர்கலை வாணியும் கமல மேலுறும் காந்தையும்'' என்ற புராணக் காட்சியுடன் ஒப்பிடுகிறார்.

வரலாற்றுச் சிறப்புமிக்க வாக்குமூலம்: வழக்கு மன்றத்தில் காந்தி அடிகள் வழங்கிய வாக்குமூலத்தை 310 வரிகளுக்கு மேல்கொண்ட நேரிசை ஆசிரியப்பாவாகப் பண்டிதை படைத்துள்ளார். ஆங்கிலேயர் கொடுமை, பாஞ்சாலப் படுகொலை, பொருளாதாரச் சுரண்டல், இந்திய இழிநிலை முதலியவற்றை உணர்ச்சிமிக்க பாக்களில் அமைத்துள்ளார் அரசுடன் ஒத்துழைக்க மறுத்து, தண்டனையை ஏற்பதே பெருமை என அடிகள் கூறுவதாக அமைத்துள்ளார்.

வரவேற்பின்மை: பண்டிதை தம் முதுமைப் பருவத்தில் இந்நூலை இயற்றினார். முதல் இரண்டு காண்டங்கள் 1923இலும், 3, 4 காண்டங்கள் 1925இலும் வெளியிடப் பெற்றன. முதல் இரு காண்டங்களுக்கு இருந்த வரவேற்பு பிந்திய இரு காண்டங்களுக்குக் கிட்டவில்லை. இந்நூல் கற்றவர்க்கும் புலவர்க்கும் களிப்பூட்டியது; சாதாரண மக்களை ஈர்ப்பதாய் இல்லை. இக்கவிதையில் கனம் இருந்தது; கவர்ச்சி இல்லை; புலமைப் பொலிவு இருந்தது; புதுமை உணர்வின் வலிவு இல்லை; இலக்கிய நயம் இருந்தது: ஆனால் எழுச்சி ஊற்றாய் அமையவில்லை. பராணப்பாங்கு இருந்தது; புரட்சி உணர்வு பொங்க வகை செய்யவில்லை.

முடிவுரை: ஆயினும் தரமான ஒரு கவிதைப் படைப்பு என்ற முறையில், தேசியத்தமிழ் இலக்கிய வரலாற்றில் இதற்கும் எடுப்பானதோர் இடமுண்டு.

---

## 9. ச. து. சு. யோகியார்

முன்னுரை: ''பாடும் குரல் நான், பாடுவாள் காளி'' என்று காளி பீடத்தில் காணிக்கையாகத் தம்மைக் செலுத்திய கவிஞர் ச. து. சு. யோகியார். உயர்பள்ளி மாணவராகப் பயின்றபோது 1924இல் சிறுகவிதைத் தொகுப்பு வெளியிட்டது முதல், இறுதி நாட்களில் சுதந்திர இந்தியாவின் சுபிட்சத்திற்காக 'பவானி குறவஞ்சி' பாடிய நாள் வரை யோகியார் மொழிக்கும் நாட்டுக்கும் தம் கவிதையால் அருந்தொண்டு ஆற்றியுள்ளார்.

உரிமைச் சாசனம்:

''போதுக்கும் பாட்டு, பொழுதெல்லாம் சங்கீதம்
யாதுக்கும் அஞ்சோம், அவனியெலாம் எம் உடைமை
சூதுக்கும் வஞ்சனைக்கும் சூட்சிக்கும் மாந்தர்செயும்
வாதுக்கும் மாமருந்து யாங்கள் செயும் வண்கவிதை''

என்று கவிஞனின் உரிமை சாசனத்தை யோகியார் கம்பீர மாக வெளியிட்டார். அந்தணராய்ப் பிறந்த அவர், சமய, சாத்திர, சாதிச்சிறுமைகளைச் சாடினார். சக்திக்கூத்து என்ற அவரது பாடலில் சமதர்ம ஒருமையின் ஆனந்தக் கூத்தாட அழைப்பு விடுக்கின்றார்.

காவிய நடை: பாரதியாரின் நடை 'வெள்ளைக் கவிதை' என்று கருதிய ச. து. சு. யோகியார், கம்பனிடம் தாம் கொண்டிருந்த காதலின் கனிவாக, காவிய நடையை முதலில் மேற்கொண்டார். பிற்காலத்தில் யோகியார் தேசியப் பாடல்களில் பாரதியாரின் எளிய காவிய நடை யின் பக்கமாகச் சாய்ந்ததைப்போல் தோன்றினாலும், அவர் கவிதைகளுக்கு முத்திரையாய் அமைந்துள்ளது, காவிய நடையே எனத்துணிந்து கூறலாம்.

காந்தியடிகளுக்குக் கவி அஞ்சலி: ''கடல் கலங்கினாலும், காவேரி வற்றினாலும், இடமது பெயர்ந்திட்டாலும், இமயமே குலுங்கினாலும் காந்தி திரு மனம் கலங்கிடாது'' என்று காந்தி அடிகளின் கலங்காத உறுதிக்குக் கவி அஞ்சலி செலுத்தினார். 1924ஆம் ஆண்டிலேயே காந்தியடிகளின் ஆன்மீகத்தலைமையையும், அறத்தின்பால் நின்ற அரசிய லையும் ஏற்று, ஏற்றமிக்க எளிய சொற்களில் யோகியார் பாடினார். எளிமை, கருணை ஆகியவற்றின் உருவகமாகக் காந்தியைக் கவிஞர் கண்டார்.

புதிய உலகம்: சக்தி உபாசனை செய்த ச. து. சு யோகியார், வரட்டு வேதாந்தத்தில் சரணாகதி அடைய வில்லை; ஞான ஒளியில் பிறந்த புதிய உலகைப் படைப்பதில் பேரார்வம் கொண்டிருந்தார். உலகாயதமும், ஆன்மீகமும், இரண்டறக்கலந்து, மனித இனம் உய்யும் வழி காண வேண்டுமென்பதில் உறுதியான நம்பிக்கை கொண்டு இருந்தார் யோகியார். ''பசுந்தமிழ் நாட்டுக்கு ஈடில்லை எந்த நாடும், இளந்தமிழ் நாட்டுக்கு ஈடு எந்நாடு வாய்க்கும்'' என்ற வரிகளில் பண்டைப் பெருமையும் புதுமையும், இளமையும் வலிமையும் இணைந்து மிற்கும்

இளந்தமிழ் நாட்டின் ஏற்றத்தை எண்ணி, எக்களிக்கின்றார் கவிஞர்.

பத்திரிகை பணி: யோகியார் 'பித்தன்' என்ற பத்திரிகையில் பணியாற்றினார். அவர் உத்தமப்பித்து, இலட்சியப்பித்து, அறத்தை நிலை நாட்டும் பித்து, அஞ்சாத்துடிப்பு மிக்கபித்து கொண்டிருந்தார். 'சுதந்திரச் சங்கு' என்ற பத்திரிகையிலும் பணியாற்றினார் செந்தமிழ் வாயிலாக, சுதந்திரச் சங்கு ஊதி சுத்த வீர ராஜ்யத்தைக் காண தமிழ் மக்களைத் தட்டி எழுப்பினார்

ஏழையரிடம் இரக்கம்: சமூகத்தின் கறைகளுக்கும், களங்கங்களுக்கும் கடவுளைக் காட்டிக் காரணம் கற்பிக்க அவர் முனையவில்லை. 'காசில்லாக் கனக ரத்தினம்' என்ற பாடல், ஏழைகள்பால் கவி கொண்டிருந்த கட்டுக் கடங்காத காதலைக் கலையழகுடன் மிளிரச் செய்யும் கவிதை ரத்தினமாகும். ''பகல் பகதூர் ராப் பகதூர் பட்சமிவன் பாலில்லை'' என்ற வரிகளில் ராவ்பகதூர் பட்டம் பெற்றோர் ராட்சச ஆதிக்கம் நடத்துவதையும், திவான்பகதூர் விருது பெற்றோர் திண்ணையில் அண்டவும் ஏழைக்கு இடம்தர மறுப்பதையும் நையாண்டி செய்கிறார். ''காசினிக்குக் கருணையில்லை கடவுளுக்குக் கருணையில்லை சீசீ! சமூகத்தின் சிறுமைகளுக்கு எல்லையில்லை'' என்று சமூகத்தைச் சாடுகிறார்.

முடிவுரை: காவிய நடை கம்பீர பவனி வர, கவிதையில் கருணை கனிந்து நிற்க, விடுதலை பெற்று, விமோசனம் உற்று, வீறு கொண்டு வாழ, மக்களை அழைத்து, ஆட்கொள்ளும் ஆனந்தக்கூத்து யோகியாரின் கவிதை, ஏழையர் வாழ்விற்காக வேகமும் வீரமும் மிக்க கவிதைகள் பாடினார். அவர் யோகத்தின் பலன், ஒருவர் வாழ்வோடு அடங்கியதல்ல. உலகின் வாழ்வைத் தழுவுவது.

# 10. சுத்தானந்த பாரதியார்

முன்னுரை: கவிஞர் சுத்தானந்த பாரதியார் வ. வெ. சு. ஐயருடன் சேர்ந்து, சேர்மாதேவி குருகுலத்தை நாட்டி நடத்தி, உரிமை எழுச்சிக்குப் பயன்பட்ட பாடல்களை உருவாக்கியவர். சமயோக ஒருமைப்பாட்டை உணர வைத்த உணர்ச்சிக்கவிஞர் சுத்தானந்த பாரதியார்.

பாடிய பாடல்கள்: அவர் இயற்றிய 'பாரத சக்தி மகா காவியம்' ஐயாயிரம் வரிகளில், விருத்தப் பாடல்களில் அமைந்து புதுயுகத்திருமறையாக விளங்குகிறது 1910 முதல் 1945 வரை அவர் பாடிய நூற்றுக்கணக்கான பாடல்களில் பல அரசியல் சூறாவளியில் காற்றோடு கலந்து காணாமல் போயின. 'பாரத சக்தி', உலகப் பாட்டு, சிங்கநாதம், முன்னேற்ற முழக்கம், சரித்திரக்கும்மி முதலியன நிலைத்துள்ளன. இவற்றில் பல பிரசாரப் பாடல்கள். பாமரரஞ்சகமான, பண்பும் பாநயமும் அமைந்த இவரது பாடல்கள் சாதி சமய நிற வேற்றுமை இன்றி அனைவரும் பாடிப்பயன் பெறத்தக்கன.

சமுதாயப் பாடல்கள்: "ஒரே கடவுள், ஒரே உலகம் ஒரே குலமாய் வாழுவோம்" என்று சுத்தானந்தர் மனித சமுதாயத்தை அழைக்கிறார். மக்கள் வீரராகவும் தீரராகவும் ஊருக்கு உபகாரம் செய்யும் உத்தமராக வாழ வேண்டும் என்றார். பொதுநலத்தொண்டும் தியாக சாதனமும் செய்யாத வாழ்க்கை, மேதகுவாழ்வல்ல என்று பாடியுள்ளார். சுத்தானந்தர் பழமையும் புதுமையும் பொலியும் பொதுமைக் கவிஞர்; பகுத்தறிவைவளர்க்கும் பாடல்கள் பல பாடியுள்ளார். சாதிபேத சமய வெறித் திமிரையும், வெல்ல ஆன்மபலமும், துணிவும் வேண்டும் என்றார்.

சுதந்திர வாழ்வு: 'ஏறு போலத் தலைநிமிர்— இந்தியாவின் சிங்கமே வீறு கொண்டு நட நட— விடுதலைக்கு

விடுதலை' என்று சுத்தானந்தர் வேகத்துடன் பாடினார். "பாரத மக்கள் அனைவரும் சமம்; பரமசக்தி மைந்தராக உரிமை கொண்டு வாழுவோம்" என முழங்கினார். சுதந்தர வாழ்வே சுந்தர வாழ்வு; சுத்த வாழ்வு; இதம் தரும் நலன்களின் இனிய வாழ்வு; பதமான வாழ்வு; பண்பட்ட வாழ்வு; சதமான வாழ்வு; சத்திய வாழ்வு; நிறைவான வாழ்வு; நித்திய வாழ்வு. இதுவே சுத்தானந்தர் கண்ட சுதந்திர வாழ்வு.

வீழ்ச்சிக்குக் காரணம்: சத்திய வாழ்வு சரிந்ததற்கும், சுதந்தர வாழ்வு குலைந்ததற்கும், அடிமை, மடமை, வறுமை, சிறுமை சூழ்ந்ததற்கும் காரணங்களைக் கவிஞர் விளக்குகின்றார். விரிந்த மனம் என்றெண்ணி விட்டுக் கொடுத்ததால் எல்லார்க்கும் இடம் தந்து ஏமாந்த நாடு என்பதை எடுத்துக்காட்டுகின்றார்.

அநீதிக்கு எதிர்ப்பு: கவிஞர் சுத்தமான தெய்வ பக்தியைப் போற்றினார்; ஆண்டவன் பெயரால் நடக்கும் அநீதிகள் பாபங்களுக்குத் திரைபோடப் பகவனைப் பஜனை செய்யும் கயமை, சமுதாயத்திற்குச் சாபமிட சாத்திரத்தைப் பயன்படுத்தும் சதிகாரப் போக்கு ஆகியவற்றைக் கடுமையாகச் சாடினார். "பணத்தைக் கண்டேன்; பக்தியைக் காணேன்; சடங்குகள் கண்டேன்; சத்தியங்காணேன்; சாதியைக் கண்டேன்; சாமியைக்காணேன்; குருக்களைக் கண்டேன்; கோயிலைக்காணேன்" என்று ஆணவ அதர்மப் போக்கை வெளிப்படுத்துகின்றார்.

கவிதைகளின் அடிநாதம்: தொடாதே, தீண்டாதே என்று விலக்குவதையும் வேறு மதம் என வெறுப்பதையும் கண்டித்தார். ஒன்று பட்டு விடுதலைக்குப் பாடுபட, தாய் மொழிப்பற்று, தாய்நாட்டுப்பற்று, தன்மானப்பிடிப்பு இவற்றை அடிப்படையாகக் கொண்டு புதிய சமுதாயத்தை உருவாக்குவதே அவர் கவிதையின் அடிநாதமாக அமைந்துள்ளது.

முடிவுரை: பிறமொழி இலக்கியத் தேர்ச்சி, வரலாற்று நோக்கு, எளிமை, திட்பம், தீமையை ஒதுக்கிச்சீர்மை காணும் பேரார்வம் ஆகியவற்றால், தேசிய உணர்வையும், தமிழ்ப்பற்றையும் ஊட்டி வளர்க்கவும், போற்றிப்பலப் படுத்தவும் பெரிதும் பயன்பட்டன சுத்தானந்த பாரதியின் பாடல்கள்.

## 11. ராய. சொக்கலிங்கம்

முன்னுரை: ஆண்டவனையும் அவனருள் பெற்ற பெரியார்களையும் குழந்தையாக்கி, இனிய தமிழில் அவர்கள் புகழ்பாடும் ''பிள்ளைத் தமிழ்'' தமிழ்ப் பிரபந்தங்களில் முன்னோர் போற்றிய முறை. அம்முறையில் காந்தியடிகளைப்பற்றி, காரைக்குடி ராய. சொக்கலிங்கம் அவர்கள் பாடிய 'காந்தி பாமாலை' கவிதை நயத்தாலும், உணர்வுச் செறிவாலும், தற்காலத் தேசியத் தமிழ் இலக்கியத்தில் சிறப்பான இடம் பெற்றுள்ளது. காந்தியடிகள் வாழ்ந்தபோதே இந்நூல் படைக்கப்பெற்றது.

காப்புச் செய்யுள்: பிள்ளைத் தமிழில் காப்புப் பருவத்தை மரபுப்படி ஒரு சமயத்தார் தொழும் கடவுளைப் போற்றாமல் எல்லாச் சமயத்தினரும் ஏற்கும் வகையில் கடவுட் குணங்களையும், தெய்வப் பண்புகளையும் போற்றும் வகையில் ஆக்கியுள்ளது சிறப்புடையதாகும். ''மாந்தர் நினைத்த வடிவோடு எவர்க்கும் நேர்ந்தவாறு ஈயும் தனித்த பொருள் தாளே சரண்'' எனக்காப்புச் செய்யுள் படைக்கப்பட்டுள்ளது. இறைவனை நோக்கி, நித்தியமே, நின்மலமே, நிர்க்குணமே, என்னிதயம் நிற்கும் கோவே என்று நெஞ்சுருகப் பாடுகையில், கடவுளுக்கு அவர் சாத்தும் பண்புகள் பல காந்திக்கும் பொருந்தும்படி, மிகவும் நயத்தோடு அமைத்துப் பாடுகிறார்.

நூல் அமைப்பு: நீதிமன்றத்தில் காந்தி அளித்த வாக்குமூலம் அன்னிய அரசுக்கு அவித்த அறை கூவலாகவும்,

இந்திய மக்களுக்கு அளித்த வாக்குறுதியாகவும் அமைந்து வரலாற்றுச் சிறப்பு பெற்றுவிட்டது. பிள்ளைத் தமிழ் மரபுக்கேற்ப, காப்பு, செங்கீரை, தால், சப்பாணி, முத்தம், வருகை, அம்புலி, சிற்றில், சிறுபறை, சிறுதேர் என்று பத்துப் பருவங்களாகப் பிரித்து, ஒவ்வொன்றிலும் பத்துப் பாடல்கள் கொண்டு 100 பாடல்களாக அமைத்துள்ளார் கவிஞர். அந்தந்தப் பருவப்பாடல்களில, பருவத்துக்கேற்ற முத்திரை வாசகம் ஒவ்வொரு பாடலின் முடிவிலும் தொடர் வாசகமாக வருகிறது.

சிற்றில் பருவம்: "ஆள இந்த அரசாட்சி அடியேன் கொள்ளேன்" எனத்தொடங்கும் சிற்றில் பருவப்பாடலில் "உலகப் போர் அரங்கில் உம்மானம் காக்கப் போராடிய இந்திய வீரருக்குத் தன்மானமற்ற அடிமை வாழ்வின் தொடர் நிலை நான் நீங்கள் அளித்த சன்மானம்" என்று மனம் நொந்து காந்தியடிகள் கூறுவதாக, கருத்து அமைந்து உள்ளது.

சிறுபறைப்பருவம்: காரைக்குடிக்குக் காந்தியடிகள் வருகைதந்தபோது கூறிய அறிவுரைகளை எடுத்துக் காட்டுகையில், தமிழ் நாட்டின் சீரையும் சிறப்பையும் செல்வத்தையும், செம்மையையும் செப்புகின்ற ஒரு செய்யுள் சிறுபறைப்பருவத்தில் வருகிறது. "நாட்டன்பு சிறிதன்றி நண்ணாதார் நாடு நன்றாய் ஏர் மலியப் பொருள் ஈந்தே இழுக்குடைய மகவுணவை ஈந்து மகார் வளர்த்தல் தன்னில் இறந்து படவிடுதல் மேல்" என்று காந்தியடிகள் கூறியதைக் கவிஞர் நினைவுபடுத்துகிறார்.

கவிச்சுவை: பிள்ளையை அடிமை ஆக்கும் பெரும் பள்ளிக்கூடங்கள் பெருமை இழந்தொழிய, நெறி பேசா வழக்குமன்றம் முந்தியழிவெய்திட, சிறுதேர் உருட்டுமாறு அழைத்து சிலர் காந்தியைப்பாடுகிறார் ராய சொக்கலிங்கம். தமிழ்க்காதலும் தாய்நாட்டுப்பற்றும் கொண்ட கவிஞர் வள்ளுவனுக்கும், காந்திக்கும் ஒப்புவமைகள் கண்டு உவக்கின்றார். நெய்தல் தொழில், நல்ல மனைவி, அறம் உரைத்தல் முதலியவற்றை ஒப்பிடுகிறார். அவர் பாடல்

கள் பாடுவதைக் காட்டிலும் பயிலுதற்கு ஏற்றவை. ஆங்கிலப் பாடல்களை அரிதின் முயன்று படிப்பதைப்போல், இந்நூலைப் பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் பாடமாக வைத்தால் விடுதலையின் விடிவு இலக்கியத்துறையில் பரவியதாகும்.

பலவகைப் பாக்கள்: ராய. சொக்கலிங்கம் உணர்ச்சி மிக்க, பாமரரைக் கவரும் பாடல்களைப் படைத்துள்ளார் என்பதற்கு 'ஊழியன்' போன்ற பத்திரிகைகளில் அவர் வெளியிட்ட பல பாடல்களும், 'புதுமைப் பாக்கள்' என்ற நூலில் வெளியிட்டுள்ள பாக்களும் சான்றாகும். விடுதலை வேட்கையில்லா வெற்று மனிதர்களை வெறுத்தும், தமிழ் மொழியின் பெருமையைப் புகழ்ந்தும் பாடல்கள் புனைந்தார்.

முடிவுரை: விருத்தம், வெண்பா, கலிப்பா, அகவற்பா, கண்ணிப்பா, தாண்டகம் போன்ற பல்வகைப்பா வகைகளையும் பாங்குடன் கையாண்டு, தாய் நாட்டுப் பற்றையும் தாய்மொழிப் பற்றையும் போற்றிப் பரப்பிய ராய. சொக்கலிங்கத்தின் படைப்புகள் ரசனை சொட்டும் படைப்புகளாகும்.

---

# 12. எஸ். டி. சுந்தரம்

முன்னுரை: கவிஞர் சுந்தரத்தின் பாடல்கள் 'உணர்ச்சி' எனும் காட்டாறு கரைமீறி ஓடுவனவாம். அவர் களம் கண்ட கவிஞர் களத்தில் அவர் அடைந்த காயங்கள், கடமைப்போரில் ஆற்றிய தியாகங்கள், அவரை வயிரம் பாய்ந்த கவிஞராக்கின. உள்ளக்கிளர்ச்சியும் உணர்ச்சிப் பெருக்கும் அவர் பாடல்களில் கரைபுரள்கின்றன.

விடுதலைப் போர்: சுதந்திரக் குரல் எழுப்பியவர்களைச் சிறையிட்டுச் சித்ரவதை செய்வதையும், மகளிரின் சிலையான வடிவைச் சூறையிட்டதையும் கண்டு மனம் பதறித்துடிக்கின்றார். இந்தியாவின் கொற்றவனில்லா

நிலையையும், இங்கிலாந்தில் இருப்பவர் குளிர் பனியில் சோளாக்காதினராக இருப்பதையும், இந்தியாவில் இருக்கும் தாசர் கூட்டத்தையும் கண்டு கவிஞர் நொந்து பாடு இன்றார். "பாசமோங்கும் பாரத தேசப்பணியே நமது மாதவமாம்" என்று இளைஞர்களை அழைத்து பகவத் சிங்கமும் தமிழின் குமரனும், பற்பல வீரரும் பலிபீடத்தில் ஆவிதுறந்ததை எடுத்துரைக்கிறார்.

ஒருமைப்பாடு: சுதந்திரத்தைக்காக்க முனையும்போது, நாட்டின் ஒருமைப்பாட்டுக்கு உலைவைக்கும் சூதுகள், ஒற்றுமையைக் குலைக்கும் முயற்சிகள் பற்றி எச்சரிக்கை யாக இருக்கவேண்டும் என்று இடித்துரைத்தார். 1945-ஆம் ஆண்டிலேயே பாரத மாளிகையில் பாகப்பிரிவினை கூடாது என்றார். 1946-ஆம் ஆண்டில் வகுப்புக்கலவரங்கள் வங்கத்தைப்பங்கம் செய்தன. சந்தையிலும் விலையாகாச் சருகுபோல் மக்கள் செத்துநாறினர். அப்போது "என் னருமை வங்கமாதாவே, உன்னழகைக் கொத்துகிற வினர்களைச் சபிக்கின்றேன்" என்று கோபக்கனல் வீசக் குரல் கொடுத்தார்.

வங்கத்தாயை வினவல்: அச்சமற்று அறம் கொன்று அபலைகளைக் கற்பழிக்கும் லச்சையற்ற காமுகரின் நாத்தடித்த கொழுப்பெரித்து உச்சிமலை விளக்கேற்றி ஒளி விசத்தாமதமேன்?" என்று வங்கத்தாயை வேதனை கலந்த வேகத்துடன் வினவினார். மதத்தின் பெயரால் கொடுமை செய்யும் காதகரை அடக்கத் தாமதமேன் என்று ஆத்திரத் துடனும் அடுக்கடுக்காய் வினவினார்.

தேசியப் பாடல்கள்: 1933க்குப்பின் 1946 வரை, திரு எம் டி. சுந்தரம் அவர்கள் உணர்ச்சி மிக்க தேசியப் பாடல் கள் பல பாடினார். சுதந்தரம் எப்போது கிட்டும் என்று எண்ணி எதிர்காலம் குறித்த நம்பிக்கையுடன் பாடினார். நம்பிக்கை துணிச்சலுக்குத் துணைநின்றது. அவர்பாடல் களின் ஆர்வப் பெருக்கு, ஆவேசத்தில் எல்லையைத் தொட்டுப் பிடித்தது. துடிப்பு சில வேளைகளில் பதட்டத் துக்கு இடம் தந்தது.

பட்டை தீட்டாத வைரம்: அவர் பாடல்களில் சொல் மென்மையும் மெருகையும் காட்டிலும், வன்மையும் வலுவும் காணப்பட்டன அதற்கு வாய்மையும் வளமும், உண்மையும் உரமும், உணர்வும் உறுதியும் ஆதாரமாய் நின்றன. கவிதையில் புகக்கூடாத காட்டம் அவர் பாடல்களில் புகுந்துள்ளது என்று குறைபட இடமுண்டு. கொள்கை நாட்டமும் இலட்சிய ஊட்டமும் உணர்ச்சி ஓட்டமும் சொல்லில் காட்டத்திற்கு மூல காரணங்களாம். அவர் பாடல்களைப் பட்டை தீட்டாத வைரம் எனக்கூறலாம்.

முடிவுரை: கவிஞரின் பாடல்களில் ஆட்சி செய்த உணர்ச்சிப் பெருக்கம், சிந்தனை வளமும், சொல் நயமும், குறிப்பாக இளைஞர்களை ஈர்த்து ஆட்கொண்டு, தேசியத் தமிழர் அணியைப் பெரிதும் பலப்படுத்தின என்பது மறுக்க முடியாத உண்மை.

---

# 13. கொத்தமங்கலம் சுப்பு

முன்னுரை: அடிமை நிலையில் சிக்கி அல்லலுற்ற அவலத்திலிருந்து காத்து மீட்டுக் கண்கொடுத்த அண்ணல் காந்தியின் அமர கதையை, துள்ளும் பண்ணில், துடிப்பு மிக்கவாறு பாமர ரஞ்சகமாகக் கொத்தமங்கலம் சுப்பு பாடிப்படைத்தது 'காந்தி மகான் கதை'.

நாட்டுப் பாடல் நடை:

"பஞ்சைகளான இந்நாட்டு மக்கள்
நெஞ்சிலிருந்திழை நூக்கிறவன்
நொஞ்ச மனசில் துணைகொடுத்துத்
துன்பங்கள் தீர்க்கவே பார்க்கிறவன்"

என்று அண்ணலுக்கு அஞ்சலி செலுத்திச் சுவையாகப் பாடுகிறார் சுப்பு 1942இல் நடந்த இறுதிப் போராட்டம் வரை விடுதலைப் போரின் ஒவ்வொரு கட்டத்தையும், வேகமான நாட்டுப் பாடல் நடையில் சுப்பு வடித்துள்ளார்.

மனத்திற்கினிய பாடல்கள்: நாட்டு நலிவு நீங்கி, போலி நாகரிகப்பூச்சு மறைந்து, பண்டைய செழிப்பும் செம்மையும் நிறைந்த பண்பான வாழ்வுவாழ மக்களை அழைக்கும் மனத்திற்கினிய பாடல்களை, மெத்த மங்களமாய்ப் பாடியவர், கொத்தமங்கலம் சுப்பு.

''சூட்டுஹாட்டு பூட்சு போடும்
கொள்ளை நீங்கித் தொலையணும்
நாட்டுப் பூட்டு நீங்கி நாவில்
தமிழ்ப் பயிரு விளையணும்''

என்ற ஆர்வம், அருமைமிக்க அவர் பாடல்களை ஆட்கொண்டது. பொங்கலிடும்போதும் வெள்ளைக்காரன் கேடு நீங்கணும் எனப்பாடினார். ''களையெடுக்கவேணும், நாடு தலையெடுக்க வேணுமின்னா'' என்று அவர் அறிவுரை புகட்டினார்.

தமிழர்க்கு அழைப்பு: பெற்ற தாய் பேதலித்து நிற்க, மற்றவர் வாழ்வுக்குப் போராடச்சென்ற மறத்தமிழர், சொந்த மண்ணுக்குத் திரும்ப அவர் விடுத்த அழைப்பு மிக உருக்கமானது.

''பிரான்சு நாட்டுச் சுதந்திரத்தைப் பிடிச்சுத் தந்தீங்க
போன மானம் போலந்துக்குத் திரும்பத் தந்தீங்க
போய் மிதிச்ச நாட்டையெல்லாம் பொழைக்க
வச்சீங்க—நீங்க
பொறந்த நாட்டை நினைச்சுப் பார்த்துப் புறப்பட்டு
வாங்க''

என்று பாரெங்கும் புகழ்க்கொடி நாட்டிய பாரதநாட்டுப் போர் வீரரை, பரிவுடன் அழைத்தார்.

முடிவுரை: ''பொறந்த நாட்டை நினைச்சுப் பார்த்து புறப்பட்டு வாங்க'' என்று அவர் போர் வீரர்களுக்கு விடுத்த அழைப்பை ''பொறந்த நாட்டை நினைச்சுப் பார்த்துப் பணியாற்ற வாங்க'' என்று மாற்றிக்கொண்டால், அது ஒவ்வொரு இந்தியக் குடிமகனுக்கும் சுப்பு விடுக்கும் சொரணை ஊட்டும் அழைப்பாக, இன்று மட்டுமல்ல, என்றும் பொருந்துவதாய் அமையும்.

# 14. நாட்டுப் பாடல்கள்

முன்னுரை: கட்டபொம்மன், ஊமைத்துரை, வெள் ளைதேவன், தேசிங்குராஜன் ஆகியோரைப் பற்றிய ஆர்வமிக்க பாடல்கள் வாய்மொழி வழக்காக, வாழையடி வாழையாக தமிழ் மக்கள் உரிமை உணர்வுக்கு ஊட்டம் கொடுத்திருந்தன. Folk-lore என்ற ஆங்கிலச் சொல்லைத் தழுவி இவை தமிழில் நாடோடிப் பாடல்கள் என்று வழங்கப்படுவதுண்டு. இவற்றை நாட்டுக்கதைப் பாடல்கள் அல்லது பாமரக் கதைப் பாடல்கள் என்று குறிப்பிடுவதே பொருத்தமாயிருக்கும்.

பாடல் வகைகள்: இவற்றில் பல கும்மிப் பாடல்களாக வும், கூட்டுப் பாடல்களாகவும் உருவாகியுள்ளன. சில, ஏடுகளில் எழுதப்பட்டு, குறிப்பாகத் தமிழகத்தில் தென் பகுதிகளில் கிடைக்கின்றன, பல வரையப்படாமல், வாய் மொழி வழக்காகவே வழங்கி, வரலாற்று உணர்வை வளப் படுத்தியுள்ளன,

மொழி அமைப்பு: இவற்றில் அந்தந்தப் பகுதிகளில் வழங்கும் கொச்சைச் சொற்கள், மருவுச் சொற்கள், ஆகியவை தாராளமாக அள்ளி வீசப்பட்டுள்ளன. 'பென்ஷன்' பிஞ்சினி என்றும், ஜாக்சன், 'சாகுசன்' என்றும் குறிக்கப்படுகின்றன. சுத்தானந்த பாரதியார் ஜாக்சன் என்பதை, 'சாக்கு மகன்' எனக் குறிக்கிறார். இப்பாடல்களில் கொச்சைச் சொற்களும் கிராமப்புற வழக்குச் சொற்களும் மிகுதியாகக் கையாளப்பட்டுள்ள போதிலும், இவை நடை ஓட்டமும், கருத்து ஊட்டமும் மிக்க பாடல்களாக அமைந்துள்ளன. உணர்ச்சி, சொற் களிலே ஒலித்து சந்தத்திலே துள்ளி, நெஞ்சைச் கவர்கிறது.

கட்டபொம்மன் உரையாடல்: கட்டபொம்மன்-ஜாக்சன் உரையாடலில் கர்வத்துக்கும் கண்ணியத்துக்கும் இடையே மோதல், சொற்களாய்த் தெறிக்கிறது. "வானம் பொழித்

தது பூமி விளைந்தது மன்னவன் காணிக்கை ஏன் கொடுப்பேன்'' என்ற முழக்கம் பற்பல வகையாக ஒலிக்கிறது. ஜாக்சனுடன் உரையாடியபோது கட்டபொம்மு கூறிய அறை கூவலாகச் சில பாடல்களில் வருகிறது. ஜாக்சன் முன்னிலையில் அல்லாமல், பொதுமக்கள் முன்னிலையில் செய்த புரட்சி முழக்கம் என்று வேறு சில பாடல்கள் கூறுகின்றன. பாடபேதம் இருந்தபோதிலும், உணர்வு வேற்றுமையில்லை.

கட்டபொம்மும் ஊமைத்துரையும்: வீரம், நேர்மை, கருணை, கடவுள் பக்தி ஆகியவற்றின் உருவமாகக் கட்டபொம்மு துரைத்தனம் நடத்தினார் என்பதைப் பாடல்கள் அழகாகச் சித்திரிக்கின்றன. ஊமைத்துரைக்குப் பட்டம் சூட்டப்பட்டபோது, அவர் மக்கள் முன் ஏற்ற சூளுரையை ஒரு நாட்டுப் பாடல் நயம்படக் கூறுகிறது.

''இன்றைக்கு இருந்தாலும் நாளைக்கு இருந்தாலும்
என்றைக்குமே ஒருநாள் இறப்போம் அன்றோ
அன்றைக்குச் சாவதை இன்றைக்குப் போரினில்
ஆக்கி அமர்வதே பாக்கியமாம்''

என்பது ஊமைத்துரை முழக்கம்.

தேசிங்குராஜன் பாடல்: கட்டபொம்மன் கும்பினியாரை எதிர்த்ததற்கும், தேசிங்குராஜன் ஆர்க்காடு நவாபை எதிர்த்ததற்கும் வேறுபாடு உண்டு எனினும் தேசிங்கு ராஜன் பாடல்களிலும் உரிமை உணர்வின் எதிரொலி அமைந்துள்ளது. தேசிங்கு ராஜன் சங்கராபரணி ஆற்று வெள்ளத்தைக் கண்டும் அஞ்சாமல் வீரர்க்கு விடுத்த அழைப்பு, கோழை மனத்திலும் வீரம் விதைக்கும்.

''போர்க்களத்தில் செத்தோமானால்
புகழும் கீர்த்தியுமுண்டு!
சாவுக்கென்று பயப்படவேண்டாம் சமேதாருமாரே''

என்ற பாடலின் கடைசி சொல்லைச் 'சகோதரமாரே' என்று மாற்றிக்கொண்டு இன்றும் பாடலாம்.

வாய்மொழிப் பாடல்கள் : கட்டபொம்மன், தேசிங்கு ராஜன் கதைப் பாடல்களைத் தவிர, கிராமப்புறங்களில் வாய்மொழியாகப் பாடப்பட்ட பாடல்கள் பல. "ஊரானி ஊரான் தோட்டத்திலே" என்ற பாடல், கிராமப் பொருளாதாரம் ஏகாதிபத்திய ஆட்சியால் சீரழிந்ததைச் சித்திரிக்கிறது. கிராமத்தில் கள்ளுக்கடைகள் மக்கள் ஒற்றுமையைக் குலைத்ததை நயத்துடன் விளக்கும் பாடலும் உண்டு.

முடிவுரை : நாட்டுப் பாடல்கள் மக்களின் உள்ளத்தில் எழுச்சியையும், வீரத்தையும் ஏற்படுத்தின. கொச்சைச் சொற்கள் இருப்பினும் மெச்சத்தகுந்த விளைவை உண்டாக்கின.

---

## 15. தெருப்பாடல்கள்

முன்னுரை: தேசிய முழக்கத்தைத் தெருவெல்லாம் பரப்பி, சந்து பொந்துகளிலும், பட்டி தொட்டிகளிலும் பாடப்பட்ட பாடல்கள் பல 20ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் தொண்டர்கள் பலரால் ஆக்கப்பெற்றன. இவை மொழி வளம் பெற்றில்லாவிடினும் தேசிய உணர்வைப் பரப்பின.

தேசபக்திப் பாடல்கள்: ஆர். பி. எஸ். மணி அவர்கள் தேசபக்திப் பாடல்கள் என்ற தலைப்பில் ஒரு பாடல் தொகுதியை வெளியிட்டார். "அட்டுத் தோலுக்கு இடம் கேட்டு அண்டி வந்திருந்த பூனை நம் நாட்டினில் புகுந்து இப்போ நரித்தனம் செய்யுது பூனை" என்பது அவற்றில் ஒன்று இப்பாடல்களில் பலவற்றை எஸ். எஸ். விஸ்வநாததாஸ் நாடக மேடையில் பாடி, பிரபலமாக்கினார். பகத்சிங், ராஜகுரு, ராஜகுரு, சுகதேவ் ஆகிய தியாகத் திலகங்களைத் தூக்கிலிட்ட துரைத்தனத்தாரைக் கண்டித்து "இதுதானே தில்லை ஸ்தலம்" என்ற மெட்டில் புனையப் பெற்ற பாடல் சிறப்புடையதாகும்.

காந்திக்கு அஞ்சலி:

""சிப்புக்கண்ணாடி சோப்புகள் விற்று சீவிக்கும்
ஏப்பக்கார வெள்ளைக்காரருமிகும் அஞ்சாத
ஸ்ரீமகாத்மா, காந்தி சந்யாசி''

என்ற பாடலை சோப்பு, கள், விற்று எனப்பிரித்துப் பாடும் போது மக்கள் ஆரவாரம் செய்வர். 'கழுகுமலை குருவி குளம்' என்ற மெட்டில் 'வெண்பருத்தி விதை விதைத்து' என்ற பாடல் காந்தியின் கதர்க் கொள்கையைப் போற்றியது.

அரசினர் அடக்குமுறை: ""குந்தி பாயும் மந்திபோல கூடி கூடிப் பேசுதீர் கொல்லைக் காட்டு நரியைப்போல் பல்லைத் திறந்து இளிக்கிறீர்'' என்ற பாடலை இயற்றிய பணிக்கு ஆறுமாதக் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டது. அதைப்பாடிய விஸ்வநாததாசுக்கு விலங்குபூட்ட சட்டம் இடம் கொடுக்கவில்லையே என்று சர்க்கார் சங்கடப் பட்டது 'ராஜதரு சிங்கம், சுகதேவ் தங்கம்' என்று வி. நடராச பிள்ளை ஆக்கிய பாடலுக்கு, அபராதம் கிடைத்தது.

சுதந்திரதாகம்: 31 பாடல்கள் கொண்ட தொகுதிக்குத் திரு. கிருஷ்ண சாமிசர்மா எழுதிய முகவுரையில் பாரதியார், ஆத்தநாரிசுவர சர்மா, வேலுச்சாமி ஆகியோரைப் போற்றுகிறார். இத்தகைய பாடல்களில் சொற்சுத்தம் துணை செய்யாவிடினும் சுதந்திரதாகம் சுருதி கூட்டியது. இப்பாடல்கள் நூல்களாக வெளியிடப்பெற்றபோது அரசு அவற்றைப் பறிமுதல் செய்தது. இப்பாடல்கள் மக்களுக்குச் சூடேற்றி ஆர்வமூட்டின.

முடிவுரை: தாளத்தோடு ததும்பிய இப்பாடல்கள் ஆளவந்தோர்க்குத் தாளம் போட்ட தாசரை மக்கள் அரங்கில் அம்பலப்படுத்தின. தெருப்பாடகர் மூலம் தேசியத் தொண்டரணி திரண்டது.

# 16. பாரதியாரும் பத்திரிகைகளும்

முன்னுரை: 'பாட்டுக்கொரு புலவன் பாரதி' நாட்டின் கண்களைத் திறக்க சுதேசமித்திரனில், காளிதாசன், சக்தி தாசன் என்ற புனை பெயர்களிலும் ஸ்ரீமான் சி சுப்பிரமணிய பாரதி என்ற சொந்தப்பெயரிலும், பல கட்டுரைகளும் 'ஒளிர் மணிக் கோவை' என்ற தலைப்பில் குறிப்புகளும் எழுதியுள்ளார்.

பாரதியாரும் பத்திரிகைகளும்: 1904 இல் சுதேசமித்திரன் உதவி ஆசிரியர் குழுவில் பாரதி சேர்ந்தார் அங்கிருந்து கொண்டே, 'சக்கர வர்த்தினி' 'இந்தியா' போன்ற பத்திரிகைகளைச் சிறப்புற நடத்தினார். இந்தியா பத்திரிகையில் கார்ட்டூன்கள் மூலம் கருத்துக்களைப்பதிய வைக்கும் உத்தியைக்கையாண்டார். சித்திரங்களைக் கொண்டே 'சித்திராவளி' என்று ஒரு மாத இதழ் தொடங்க முயன்றார் 'விஜயா' என்ற நாளிதழின் ஆசிரியராகவும், 'கர்மயோகி' தமிழ்ப்பதிப்பின் ஆசிரியராகவும், 'பால பாரத' என்ற ஆங்கில இதழ் ஆசிரியராகவும் விளங்கினார். இவ்வாறு ஆங்கில ஏகாதிபத்தியத்திற்கு அஞ்சாது பத்திரிகை பாணிகளை ஓய்வு அயர்வின்றியும், ஒவ்வொன்றாகவும், சாரை சாரையாகவும் பெய்து கொண்டிருந்தார்.

தேசபக்தி: 1909-ஆம் ஆண்டு ஏப்ரல் 10-ஆம் நாள் இந்தியா இதழில் 'தேசபக்தி' என்ற தலைப்பில், 'துருவன், பிரகலாதன் விஷ்ணுவிடம் செலுத்திய பக்தியை நாம் நாட்டின் மேல் செலுத்த வேண்டும். பாரத மக்களுக்குத் தொண்டு செய்வதைவிட சிறந்த மதம் வேறு கிடையாது. தமிழர்கள் இத்துறையில் பின்னடைந்திருக்கின்றனர். இப்பிழை நீங்காவிடில் சர்வநாசமடைவீர்கள்' என எழுதியுள்ளார்.

ஒற்றுமை உணர்வு: 1920 நவம்பர் 30-ஆம் நாள் சுதேச மித்திரன் "தேசபக்தர்கள் நடைமுறை குறித்து மாறுபாடு கொண்டு ஒருவரை ஒருவர் சந்தேகித்தலும் மிகக் கொடிய வழக்கங்கள் இது வடகலை, தென்கலை சண்டை போன்றது விடுவெள்ளை பூசுதல் தொடர்பாகக் கணவன் மனைவி சண்டையிடுதல் போன்றது" எனக்கூறி ஒற்றுமையை வலியுறுத்துகின்றார்.

சூடான விமரிசனம்: பாரதியாரின் பாடல்களை வெளியிடப்பலரும் தயங்கிய நேரத்தில் திரு. வி. கிருஷ்ண சாமி ஐயர் அவற்றில் மூன்றை வெளியிட்டுப் பள்ளிகளுக்கு இலவசமாக அனுப்பினார் அவர் 1909-ஆம் ஆண்டில் புதிய சீர்திருத்தங்களை வரவேற்று நீதிபதி பதவியை ஏற்றார் அப்போது பாரதியார் தமது 'விஜயா' நாளிதழில் 'எதிர்க்கிறாயா? துணை செய்கிறாயா?' என்ற தலைப்பில் கடுமையாக, காரமாகத் தலையங்கம் எழுதினார். "காங்கிரசின் மேல் உயிரை வைத்தது போல் நீர் பேசிய கதையெல்லாம் இப்போது எப்படியாயிற்று? வஞ்சனை, நடிப்பு, ஏமாற்று, பாவனை, வேஷம், பொய், உமக்கு ஐயாயிரம் ரூபாய் மாதம் தோறும் கிடைத்தால் எங்கள் ஜாதி உஜ்ஜீவித்து விடுமா? ஐயோ வி கிருஷ்ணஸ்வாமி ஐயரே. என்ன ஜன்மம் எடுத்து விட்டீர்" என்று சுருக்கெனத் தைக்குமாறு எழுதியுள்ளார்.

தலைவர்களுக்குப் பாராட்டு: லாலா லஜபதிராய் தீபாந்திரத்திற்குப் போவதைப் பற்றி மக்கள் மனம் கொதித்துக் கொண்டிருக்கும் போது கூட, இவர்கள் சர்க்காரை ஸஹஸ்ர நாமம் சொல்லி அர்ச்சனை செய்கிறார்களே" என்று வேதனை தோய்ந்த சொற்களிலே வேகத்தைப் பாய்ச்சுகின்றார். தாதாபாய் நௌரோஜி மறைவு குறித்து "நம்பிக்கைக்குப் பெயர் தாதாபாய் நௌரோஜி—அதற்கு மரணம் இல்லை" என்று ஆறுதல் கூறினார்.

சுதந்திரம் பெற வழி: ஒவ்வொரு கிராமத்திலும் தேச பாஷைகளில் புதிய படிப்புச் சொல்லிக்கொடுக்க ஏற்பாடு செய்தால் காருண்ய கவர்மெண்டார் நமக்குச் சுதந்திரம்

கொடுப்பர் என்று எழுதினார், "கூட்டத்தில் கூடி நின்று கூவிப்பிதற்றலின்றி நாட்டத்திற் கொள்ளாரடிகிளியே, நாளில் மறப்பாரடி" என்று பாடிய பாரதி நடிப்புச் சுதேசிகளை 'ஞானரதம்' என்ற தொடர் கட்டுரையில் அறிமுகப்படுத்துகின்றார். சொந்த முயற்சி என்றால் சுண்டு விரலை அசைக்கவும் சித்தமில்லாது ஓடும் போலிகளைப் போலின்றி, உழைப்பைக் காணிக்கையாக்க, பாரதி நம்மை அழைத்தார்.

பாரதியின் உரை நடை: பாரதியின் உரைநடை உணர்ச்சி மிக்க, உயிருள்ள நடை. அமைதி, அடக்கம், ஆத்திரம், ஆவேசம், இனிமை எழில், எள்ளல் துள்ளல், முதலியவை கொண்டு நகைலும் நையாண்டியும் நயத்துடனும் நாகரிகமாகவும் நடைபோடும் வகையில் நேருக்கு நேர் உரையாடும் விதமாக உரைநடை தோன்றியது.

முடிவுரை: அரசியல், அறிவியல், புராணம், புரட்சி இலக்கியம் வேதாந்த சித்தாந்தம் முதலிய பல்வேறு வழிகளில் பாரத தேசத்தாரின் அகத்தில் தழல் வீசி எரிந்து வந்த தேசபக்திப் பெருங்கனலின் பொறிகளை" பாரதியின் கட்டுரைகள் பரப்பின.

---

## 17. திரு. வி. க. (இதழ்த்துறை)

முன்னுரை: பாரதியாருக்கு அடுத்தபடியாகப் பத்திரிகை உலகில் புரட்சி செய்து, தீந்தமிழுடன் தேசிய உணர்வைக் கலந்து ஊட்டியவர் திரு வி. க. "தெய்வம் இகழேல், தக்கார் நெறி நில், தேசத்தோடு ஒத்துவாழ்" என்ற வாசகங்களை வட்டத்தில் சுற்றி வரைந்து, நடுவே இந்திய நாட்டுப் படமும், சென்னை அமைந்த இடத்தில் ஒரு விண் மீனும் பொறித்த இலச்சினை தாங்கி திரு வி க. வின் "தேசபக்தன்" 7— 2—1917 இல் தோன்றியது.

தமிழ்ப்பற்று: "பண்டைத் தமிழ் மக்கள் உரை நடையில் எனக்குப் பெரும் பற்றுண்டு. பிறமொழிக் கலப்

பின்றித் தமிழ் பேசவும், எழுதவும் ஆர்வம் கொண்டு, விட்டின்பத்தில் வெறுப்பும், தமிழ் நாட்டில் பலமுறை பிணி தாங்கித் தொண்டு புரிவதில் விருப்பும் பெற்றுள்ளேன்" என்று அவர் 'தேசபக்தாமிர்தத்தின் முன்னுரையில் எழுதியுள்ளதில் அவருடைய அளவற்ற தமிழ்ப்பற்று விளங்குகிறது.

நாட்டுப்பற்று: "தேசபக்தன் சுதந்திரத்தை விரும்புகின்றான்; சுய ஆட்சி கேட்கின்றான்; இந்தியாவிற்கும் இங்கிலாந்திற்கும் சிநேகாத்துவத்தை உண்டு பண்ணுகின்றான்" என்று 7—3—1918 இல் எழுதிய தலையங்கத்தில் பாரத நாட்டுக்குப் பத்திரிகையை அவர் காணிக்கையாக்கினார். "யான் உருத்திரன் ஆனேன். என் எழுதுகோல் பாசுபதமாயிற்று" என்று தேச பக்தனில் தம் எழுத்து பற்றி விமரிசித்தார்.

மொழிநடை: "தேசபக்தனுக்கென்று ஒரு தனி நடை கொண்டேன்; சிறு சிறு வாக்கியங்கள் எளிமை; என் நடை எங்கெங்கோ ஓடும்; திரியும்; அலையும்: இடத்திற்கேற்ற நடம் புரியும்" என்று தம் நடையை அவரே படம்பிடித்துக் காட்டினார் கலங்கலும், கழிவும், கலப்பும் களங்கமும் நிறைந்த தமிழ் நடையில் தமிழ்ப் பத்திரிகைகள் இருந்த நிலையில், தெள்ளுதமிழ் நடையில், மனத்தை அள்ளும் வகையில் பத்திரிகையில் எழுத இயலும் என்பதை நிலைநாட்டியவை திரு வி க. வின் 'தேசபக்தனும்' நவசக்தியும்.

தலைவர்க்கு அஞ்சலி: தேசபக்தன் மக்கள் மனத்தைக் கொள்ளை கொண்ட தலைவர்க்குச் சொல்மலர்களால் அஞ்சலி செய்தது திலகர், காந்தியடிகள், பெசன்ட் அம்மையார் முதலியோர் புகழை ஓதி. ஓதி வழிபாடே நடத்தியது திரு வி க தலைவர்களைத் தேசம் என்றே போற்றினார். தேசபக்தனால் வெறுப்பு வாதக்கட்சி வெறுக்கு நெல்லாய், பல்லிழந்த பாம்பாய் ஆனதைக் குறிப்பிடுகின்றார். டாக்டர் சுப்பிரமணிய ஐயர், ஸர் பட்டத்தைத் துறந்தபோது 'மயிலை முனீந்திரர்' என்று பாராட்டினார்.

பழமையும் பக்தியும்: தெய்வ பக்தி, ராஜ பக்தி, தேச பக்தி மூன்றும் அவர் நோக்கில் மேலோங்கியிருந்தது. ''எங்கள் மன்னர் மன்னராகிய ஐந்தாம் ஜார்ஜுக்கு வெற்றி ஓங்கச் செய்து எங்கள் பந்தத்தை ஒழிக்க இறைவன் அருள்வாராக'' என வேண்டினார். பழமையில் கொண்ட பக்தியால் இன்றைய நாகரிகம் பேயாகவும், விஷமாகவும், பூதமாகவும் நாட்டை அழிப்பதாக எழுதினார். ''பண்டைக் காலத்தில் சூரன், இராவணன் முதலிய ஒரு சில இராட்சதர் இருந்தனர்; இன்றோ வீடுகள் தோறும் இராட்சதர்கள் இருக்கிறார்கள்'' என்று எழுதியது சன்மார்க்க உபதேசமாக அமைகிறதே ஒழிய சமுதாய அநீதிகளுக்கு முழு விளக்கம் தருவதாயில்லை.

வேதாந்த விலங்கு: உலகத்தில் இராட்சத குணத்தை நீக்க மஹரிஷிகள், நவநாத சித்தர்கள் கருணையை வேண்டி நிற்கின்றார். மாண்டேகு வருகையையும், தொழிற்கட்சியார் ஆதரவையும், அன்னை பெசன்ட் செய்தியையும் ஆண்டவன் திருவிளையாடல்கள் எனக் கூறியதன் மூலம், தெய்வ பக்தி என்னும் பீடத்தில், தேச பக்தியைத் தத்தம் செய்து, வீறுகொண்டு எழவேண்டிய மக்களுக்கு வேதாந்த விலங்குகள் பூட்டி விட்டாரோ என்ற வேதனை பிறக்கிறது.

கேள்வியும் பதிலும்: காந்தியடிகள் ஆறு ஆண்டு காவல் பெற்ற செய்தி கேட்டு நடுக்கமுற்று இங்கிலாந்தை நோக்கி உனக்கு உண்மை வேண்டாமா? அன்பு வேண்டாமா? பொறுமை வேண்டாமா? அடிகளைக் கிறிஸ்துவக்கண் கொண்டு நோக்குக என வேண்டுகின்றார். அதில் அழுகை இருக்கிறது; அரசியல் இல்லை; புலம்பல் இருக்கிறது; புரட்சி உணர்வு இல்லை. காந்தி என்பது சமுதாயத்திற்கு அறை கூவலா, அல்லது ஆறுதலா என்ற கேள்விகள் எழும்போது திரு வி க பற்றி வரா. அவர்கள் எழுதிய சொல்லோவியம் பதில்தருகிறது ''ஆண் பெண் தன்மைகளால் வீட்டுக்கும் நாட்டுக்கும் இடையே நசுக்குண்டு கரைந்து உருகுகின்றார் திரு.வி.க. காவிய உலகில் சோலை

இல்லாது போனார்'' என எழுதியுள்ளார். முனிவராக விளங்கிய அவர் முழுமையான போராட்ட வீரராக விலங்க இயலவில்லை.

முடிவுரை; திரு. வி. க.வின் தமிழால் தேசியம் வளர்ந்தது. திரு.வி.க.வின் தேசியத்தால் தமிழ் தழைத்தது தம் வாழ்வாலும் வாய்மையாலும் தொண்டாலும் தூய்மையாலும் தமிழகத்துக்கு வாழ்வளித்த பெரியார் களில் ஒருவர் திரு வி க. தமிழுலகம் அவருக்குத் தலை சாய்த்து வணங்குவதால் தலைநிமிர்ந்து நிற்கும் தகுதி பெற்றுத்திகழும்.



## 18. டாக்டர் வரதராசலு

முன்னுரை: காற்றையும் தண்ணீரையும் போல, தமிழ் நாட்டுக்கு இன்றியமையாதனவாய் இருந்த தேசபக்தியை யும், மொழிப்பக்தியையும் வளர்த்தவர் டாக்டர் வரத ராசலு. 'தமிழ்நாடு' பத்திரிகைப் பாசறையில் பண்பட்ட எழுத்தாளர்களைப் பக்குவப்படுத்தி பேனா முனைப் படை வீரர்களாகத் தமிழகத்திற்குத் தந்த எழுத்தாளரிடையே எழுத்தாளர் ஆவர்.

இதழ்ப்பணி: முதலில் திருப்பூரில் தாம் தொடங்கிய 'பிரபஞ்சமித்திரன்', வாரப்பதிப்பிலும், சேலத்தில் தொடங்கிய 'தமிழ்நாடு' வார இதழிலும், 1927இல் தமிழ் நாடு நாளிதழான பின்பும் அவர் எழுத்து, மக்களிடையே உணர்ச்சியைத் தட்டி எழுப்பப் பலமான பிரசாரக் கருவி யாக அமைந்தது. அரசியல் நடப்புகளை சூடாகவும், சுவையாகவும் விமரிசித்தார்.

சிறப்பு முத்திரைகள்: ஒத்துழையாமை இயக்கத்திற்கு அணை போட அன்னியரது ஏகாதிபத்தியம் கனம் ஸ்ரீனிவாச சாஸ்திரியாரை தந்திரமாகப் பயன்படுத்தி வந்ததைக்கண்டு வருந்தி, 'ஜின்டான் சாஸ்திரி' என்ற

தலைப்பில் இடித்துக் கூறினார். வேகமான விறுவிறுப்பான தமிழ்நடையில் எழுதினார். எழுத்தாளர்க்குப் பயிற்சி அளித்தார். பதட்டமில்லாத பார்வையைக் கவரும் தலைப்புகள்; அத்துமீறாத, அழுத்தமாகக் கருத்தை வெளியிடும் குறிப்புகள், நிதானம் இழக்காமல் நேர்மையான எண்ணங்களை எடுத்துரைத்த கட்டுரைகள்; பண்பு தவறாமல் பலமாகக் கொள்கையைப் பரப்பிய தலையங்கங்கள் ஆகியவை டாக்டர் வரதராசலு நடத்திய 'தமிழ்நாடு' பத்திரிகையின் சிறப்பு முத்திரைகள்.

சொல் அமைப்பு: 'Water falls' என்ற ஆங்கிலச் சொல்லை, மொழி பெயர்த்து நீர்வீழ்ச்சி என்று எழுதாமல் அருவி என்ற அருமையான தமிழ்ச்சொல்லையே கையாள வேண்டும் என்பார் அவர். சொல்லில் சிக்கனம், தெளிவு முதலியவற்றை வற்புறுத்தினார். 'முடிவு செய்யப்படும் என்று தெரிவிக்கப்பட்டது' என்று சுற்றி வளைத்து எழுதாமல் 'முடிவு செய்வதாகத் தெரிவித்தார்கள்' என்று முனைப்பாகவும், நேருக்கு நேராகவும் எழுத வேண்டும் என்றார். 'படும்', 'பட்ட' என்பவற்றைக் கைவிடுமாறு அறிவுறுத்தினார். 'தமிழ்நாடு' பத்திரிகையில் அவர் எழுதிய தலையங்கங்களை, 'இந்து' பத்திரிகையும், 'சுதேசமித்திரன்' பத்திரிகையும் வாரந்தோறும் வெளியிடும் அளவுக்குப் பேராதரவைக் கவர்ந்திருந்தன.

அரசினர் அடக்குமுறை: 'பிரபஞ்சமித்திரன்' பத்திரிகைக்கு ஆயிரம் ரூபாய் ஈடுகாணம் செலுத்த வேண்டுமென்று அரசு ஆணையிட்டது. தமிழ்நாடு பத்திரிகையில் வெளியான கட்டுரைக்காக ஒன்பது மாத சிறைத்தண்டனை பெற்றார்.

சமுதாயத்துறை: பொட்டுக்கட்டும் வழக்க ஒழிப்பு, இந்து சமய பரிபாலன போர்டு சட்டத்திற்கு ஆதரவு, வ. வே. சு. ஐயர் நடத்திய சேர்மாதேவி குருகுலத்தில் அந்தண மாணவர்க்குத் தனியாகவும், மற்றவர்க்குத் தனியாகவும் உணவுப் படைத்ததைக் கண்டித்தல் போன்ற சமுதாயத்துறையில் முற்போக்கான கொள்கைகளை தேசிய

வாதிகள் சிலரின் எதிர்ப்புக்கும் அஞ்சாமல் தமிழ் நாடு பத்திரிகை தீவிர பங்கேற்றது.

விடுதலைப்படைக்கலன்: அரசாங்கத்தின் ஆதிக்கத்துக்கு அஞ்சிப்பணிந்து சிலரும், சலுகைகளில் மயங்கிச் சிலரும், நமக்கேன் வம்பு என்று நாட்டு நடப்பில் நாட்டம் கொள்ளாமல் சிலரும், மனித உணர்வு இல்லாது மரத்துப் போய்ச் சிலரும், வாழ்ந்து வந்த சூழ்நிலையில், எழுத்தின்மூலம் ஏகாதிபத்திய எதிர்ப்பு இயக்கத்தையே உருவாக்கி பாரத நாட்டின் விடுதலைப் படைக்கலனாகப் பத்திரிகையைப் பயன்படுத்தி, துன்பத்தைத் துச்சமாகக்கருதி, தியாகத்தையே பரிசாக ஏற்று, தமிழுக்கும் தாய் நாட்டுக்கும் தளராத தொண்டாற்றியவர் டாக்டர் வரதராசுலு.

முடிவுரை: நாயுடு, முதலியார், நாயக்கர் என்று செல்லமாக அழைக்கப்பட்ட செம்மல்கள், வரதராசுலு, திரு. வி. க., பெரியார் ராமசாமி ஆகிய மூவரும் ஆவர். இவர்கள் தமிழகத்தைத் தட்டி எழுப்பி, மக்கள் சக்தியை ஈட்டி, மகத்தான இயக்கத்தில் பூட்டி, வரலாற்றில் நிலையான இடத்தை நிலை நாட்டிக் கொண்டனர்.

## 19. வ. ராமசாமி ஐயங்கார்

முன்னுரை: விறுவிறுப்பான தமிழ் நடையில், வேகமான கட்டுரைகள் பல எழுதி, சீர்திருத்தக் கருத்துக்களைப் புகுத்தி, சிந்தனையைத் தூண்டி உரைநடைக்கு உயர்வு கொடுத்து, இருபதாம் நூற்றாண்டுத் தமிழ் எழுத்துலகில் இணையற்ற புகழை ஈட்டிக்கொண்டார், வ. ரா. என்ற ராமசாமி ஐயங்கார் ஆவார்.

இடித்துரை: முன்னேற்றத்துக்கு முட்டுக்கட்டையாக இருந்த மூடப்பழக்கங்களை முறியடிப்பதில் அவர் முனைந்து நின்றார். "இக்கரை கடந்திடின் அக்கரையே இருப்பது சிதம்பரச் சக்கரையே என்று பஜனை செய்துகொண்டே

போனால், சரிக்கரை கிடைக்குமா? நம்மை அடக்கியாளும் அமெரி பெரியார் போன்றவர்கள், தங்கள் காரியம் பலிக்க, என்ன அருமையான பஜனை என்று தட்டிக் கொடுப்பது போல ஏமாற்று வேலை செய்வார்கள்'' என்று இடித்துரைத்தார். சூரியகிரகண சமயத்தில் காசியில் சூழ்ந்த கூட்டத்தைக் கண்டு மேனாட்டு அறிஞர் ஆல்டஸ் ஹக்ஸிலி ''இக்கூட்டத்தில் பாதிப்பேர் உழைத்தால் நாடு விடுதலை அடைந்திருக்குமே'' எனக் கூறியதை வ ரா. நினைவுபடுத்தி ''இந்தப் பாபவிமோசனத்துக்கு சுயராஜ்யம் தான் வழி என்றார் லோகமான்யர். அக்காலப் பெரியார்கள் காசிராமேசுவர யாத்திரை என்றனர்'' என்று சுருக்கமாகச் சொல்லிச் சுட்டெரித்தார்.

தனிப்பாணி: நகைச்சுவையை அவர் சாடியபோதிலும் நாட்டுக்கு நல்லபல கருத்துக்களை அவர் சொன்ன விதத்தில் நயமும் நகைச்சுவையும் இயல்பாக நடமாடின ''இளமையில் கல்'' என்ற பழமொழிக்கேற்ப, அக்காலத் திண்ணைப் பள்ளி ''இளமையில் கல்லாக்க இணையற்ற ஸ்தாபனம்'' என்று இடித்துக் காட்டினார். 'சுதந்திரன்', 'சுயராஜ்யா' ஆகிய பத்திரிகைகளில் அவர் தமக்கென்று வகுத்துக் கொண்ட தனிப்பாணி அவருக்கு மகத்தான செல்வாக்கைத் தந்தது. கதர் என்ற தலைப்பில் அவர் அன்றாடம் எழுதிய விமர்சனப் பத்தியில், கதரில் தொடங்கி நாட்டு நலிவுகளை அலசி மீண்டும் கதரைப்பற்றியே முத்தாய்ப்பு வைத்து முடிப்பார்.

மணிக்கொடி' வ ரா. இளம் எழுத்தாளர் முன்னேற்றத்திற்கு இயன்ற உதவிகளைச் செய்தார். எழுத்தாளர் வாழ்வில் இணைபிரியாத மை இரண்டு; ஒன்று எழுதும் மை, மற்றொன்று பொறாமை. இக்கூற்றுக்கு விலக்காயிருந்தவர் வ ரா, டி எஸ் சொக்கலிங்கம், ஸ்டாலின் ஸ்ரீனிவாசன், ஆகியோருடன் சேர்ந்து வ. ரா. நிறுவி நடத்திய 'மணிக்கொடி' ஒரு சிறிது காலமே கொடிகட்டிப் பறந்த போதிலும் மணிமணியான எழுத்தாளர் பலரைப் பக்குவம் செய்து, தமிழ்ப் பத்திரிகை உலகில் ஒரு புதுப் பரம்பரையையே உருவாக்கியது.

பூக்கடைக்கு விளம்பரம்: வ. ரா. வின் இலக்கியத் தொண்டில் இணையற்ற சாதனை, அவர் பாரதியின் புகழைப் பரப்பியது. "பூக்கடைக்குப் பக்கத்தில் புலால் கடை திறக்கப்படும்போது பூவுக்கு விளம்பரம் தேவைதான் அப்பணியில் ஈடுபட்டு தமிழர்களின் மனப்பான்மையை அடியோடு மாற்றிவிட்டார் பாரதியார்; தமிழர்களை அதட்டினார், வெருட்டினார், வெறுப்பதுபோல் பாவனை செய்தார், தட்டிக்கொடுத்தார், அங்கலாய்த்தார், அணைத்தார்; புதுவாழ்வுக்கு அர்ப்பணம் செய்து கொண்டார். தமிழை மேன்மையடையச் செய்தார்" என்று பாரதியின் சாதனையைப் பாராட்டினார்.

முடிவுரை: "சரித்திரத்தில், எந்த நாட்டுச் சரித்திரத்திலும் இதுவரையிலும் காணமுடியாத மூர்த்திகரம் வாய்ந்தவர் காந்திஜி என்பது என் கருத்து" என்று தேசப் பிதாவைத் துதித்தார். மடமையை நீக்கி, பழமையின் தளைகளைத் தகர்த்து, சமூகத்தைச் சீர்திருத்தி, தனி வாழ்விலும் துணிவுகண்டு, மனிதனே, புதுவாழ்வு வாழ வாராய் என்று அழைத்தவர் வ.ரா.

---

## 20. டி. எஸ். சொக்கலிங்கம்

முன்னுரை: இருபத்தைந்து ஆண்டுகளுக்கு மேலாக, கொள்கை குலையாது, உறுதி தளராது, தமிழ்ப்பத்திரிகை உலகத்துக்குத் தொண்டாற்றி, தேசிய உணர்வை மக்களுக்கு ஊட்டியவர்களில் தலை சிறந்தவர் திரு. டி. எஸ். சொக்கலிங்கம்.

இதழ்ப் பணிகள்: திரு. டி. எஸ். சி. 1923இல் டாக்டர் வரதராசுலு நடத்திய 'தமிழ்நாடு வாரப்பதிப்பின் உதவி ஆசிரியர் குழாமில்' சேர்ந்தார். 19:7இல் 'தமிழ்நாடு' தினப்பதிப்பு ஆசிரியராகப் பொறுப்பேற்றார். 1931இல் 'காந்தி' என்ற வாரம் இருமுறை பத்திரிகையை வெளியிட்டார். தினப்பதிப்பாகவும் இது பின்னர் வெளிவந்தது.

1934இல் சதானந்த் தொடங்கிய 'தினமணி' நாளிதழ் ஆசிரியராகப் பணியாற்றி எழுத்துச் செல்வாக்கின் உச்சநிலை அடைந்தார்.

வழக்கும் முடிவும்: 1934இல் பீகாரில் புவி அதிர்ச்சி ஏற்பட்ட போது. அரசு மெத்தனமாக இருந்து விட்டதென்று கண்டித்து 'சர்க்கார் எங்கே' என்று எழுதிய தலையங்கத்திற்காக 'ராஜ நிந்தனை' வழக்குத் தொடுக்கப்பெற்றது. இதனை எதிர்த்து திரு. சொக்கலிங்கம் உயர் நீதிமன்றத்தில் சாதாரண முறையீடு செய்தார். நீதிமன்றம் அரசின் உத்தரவைத் தள்ளுபடி செய்தது. "காந்தி ஆசிரியர் எழுதியதில் காணப்படும் இரண்டொரு பிடிப்பு வார்த்தைகளே அவரது வெற்றிக்குச் சாதகமாய் நின்றன" என்று 'தாருல் இஸ்லாம்' பத்திரிகை கருத்து வெளியிட்டது.

தினமணியில் பணி: தினமணி ஆசிரியராகப் பணியாற்றிய போது, அவருடைய அரசியல் விமர்சனங்கள், ஆணித்தரமான கட்டுரைகள், வேகமான தலையங்கங்கள், விளக்கமான குறிப்புகள், வெட்டு ஒன்று துண்டு இரண்டு என்ற நடை, ஆகியவை தமிழக மக்களிடையே ஆர்வப் பெருக்கை உண்டு பண்ணின. கனல் கக்கும் எழுத்து, கருத்தாழம் கொண்ட கட்டுரைகள், கவர்ச்சி மிக்க நடை ஆகியவை சொக்கலிங்கத்தின் தனிப்பாணியில் முத்திரைகளாய் விளங்கின. அவர் எழுத்து படிப்பவர்களை உலுக்கியது. அவர்களுக்கு உணர்ச்சி ஊட்டியது. 'உன்னல், ஊதல், உறிஞ்சல்' என்ற தலைப்பில் அவர் அன்றாட நிகழ்ச்சிகளை விமரிசித்து எழுதிய குறிப்புகளில் நயமும் நையாண்டியும் விளையாடின. தேசியத்தையே கலிங்கமாகத்தரித்த சொக்கலிங்கத்தின் எழுத்து, களை கட்டியதாகவும், கனகச்சிதமாகவும், கம்பீரமிக்கதாயும் விளங்கியது.

சுத்தானந்த பாரதியார் பாராட்டு: சுத்தானந்த பாரதியார் சொக்கலிங்கத்தின் பணி விழாவின் போது "ஆளும் சொக்கு; பேரும் சொக்கு: அரும்பும் புன்னகை.அதனினும்

சொக்கு: சொக்குத்தமிழில் சுடச்சுடத் தீட்டும் பேனாச் சொக்குப்பிள்ளை வாழியவே'' என்று பாடியது சொக்கலிங்கத்தின் எழுத்தில் சொக்கிய தமிழர் செலுத்திய அஞ்சலியாகும்.

பாட்டும் பேச்சும்: துணிவான கட்டுரைகளை எழுதியதோடு துடிப்புமிக்க பாடல்களையும் அவர் புனைந்தார். 'தேவிதாசன்' என்ற புனை பெயரில், 'கதர்ச்சூரியன்' என்ற தலைப்பில் அவர் எழுதிய உணர்ச்சிமிக்கபாடல் 'காந்தி' பத்திரிகையில் வெளிவந்தது. ''மணலைக் கயிறாய்த் திரிக்கலாம்; வானத்தை வில்லாய் வளைக்கலாம்; ஆனால் எழுத்தாளர்கள் ஒன்று சேர்வது கடினம்; நவக்கிரங்களை சிருஷ்டி செய்தவர்கள் இந்த எழுத்தாளர்களைப் பார்த்துத்தான் சிருஷ்டி செய்தார்களோ'' என்று 1944 கோவையில் புகழ்பெற்ற எழுத்தாளர் மாநாட்டில் நொந்து கொண்டார்.

முடிவுரை: ஒன்று பட மறுக்கும் எழுத்தாளர் கூட ஒருமுகமாய்ப் பாராட்டும் ஓர் எழுத்தாளர் — பேனா வீரர் என்று பொருத்தமாகப் போற்றப்படும் தென்காசி சங்கரலிங்கம் சொக்கலிங்கம் பிள்ளை ஆவார்.

---

## 21. கல்கி

முன்னுரை: திரு. வி. க. வின் 'நவசக்தி' யில் பயிற்சி பெற்று தமக்கென தனிப்பாதை வகுத்து, மக்கள் பேராதரவைக் கவர்ந்து, செல்வாக்கும் செல்வமும் பெற்று, எழுத்தாளரும் சமூகத்தின் தூண்களில் ஒருவராய் விளங்கஇயலும் என்ற சாதனையைச் செய்து காட்டியவர் கல்கி ரா. கிருஷ்ணமூர்த்தி. அவர் தமிழ்ப்பற்றையும், தேசிய உணர்வையும் குழைத்து, அடிமைத்தனத்துக்கு மருந்தாகவும், ஆர்வத்துக்கு விருந்தாகவும் அளித்து, பாமரருக்கும் படித்தோருக்குமிடையே பலமான பாலமாகப் பத்திரிகையைப் பயன்படுத்தினார்.

புனை பெயர்கள் : 'ஏட்டிக்குப் போட்டி' என்ற நகைச் சுவைக் கட்டுரையுடன் நாட்டுக்கு அறிமுகமான அவர், தமிழர் மனத்தைத் தொட்டு, அறிவை எட்டி, உணர்வில் கலக்கும் வகையில் எழுதினார். 'கல்கி' என்ற பெயரில் எழுதிய கட்டுரைகள் களிப்பும் ஊட்டின; கல்வியும் புகட்டின. 'ரா.கி' என்ற பெயரில் அவர் எழுதியவற்றில் ரசனை கொட்டியது. 'கர்நாடகம்' என்ற பெயரில் கலையுணர்வு மிளிர எழுதினார். பழமையில் பக்தி, புதுமையின் சக்தி, வேடிக்கை, வேதாந்தம், எளிமை, ஏற்றம், முதலிய வற்றுடன் வருங்காலத்தை எதிர்கொண்டு அழைக்கும் வகையில் கருத்துமிகுவியல்களைக் காணிக்கையாக்கினார்.

எழுத்தே வாழ்வு: கல்கி எழுதாத பொருளில்லை; தழுவாததுறை இல்லை. தியாகையர் பாடலும் வேண்டும், தீந்தமிழ்ப்பாடலும் வேண்டும் என்று இசைபற்றி இங்கிதமாய் எழுதினார். மக்கள் உணர்ச்சிகளைப் பிரதி பலிக்க வேண்டும் என்று நாடகம் பற்றி நயமாக எழுதினார். புதுமை வளமை திரட்டி இலக்கியம் எழுச்சிபெற வேண்டுமென எடுத்துக்காட்டினார். அன்றாட மனிதனின் கோணல்களையும் குதர்க்கங்களையும் கேலி செய்தார். அதிகாரிகள் ஆணவத்தை அம்பலப்படுத்தினார். பல்லிளித்துப் பல்லக்குத் தூக்கி, பதவியைப்பற்றிக் கொண்டோரை, 'நாற்காலி கவிழும் நாளில்' நல்ல சொல் சொல்ல நாலுபேர் மிஞ்ச மாட்டார்கள் என்று நையாண்டி செய்தார். ஏழையரின் துன்பம்; இன்பம், வீரரின் நேர்மை, வித்தகரின் சீர்மை முதலிய பலவேறு செய்திகளை எழுதினார். எழுத்தே அவர் வாழ்வாகவும், தமிழக வரலாற்றின் சிறப்பு மிக்க ஒரு பகுதியாகவும் அமைந்தது.

அரசியல் அரிச்சுவடி: 1933-இல் ஆனந்த விகடனில் கல்கி எழுதிய கட்டுரை ஒன்றில் 'அரசாங்கம் என்பது என்ன? என்பதற்கு விளக்கம் தந்தார். "மக்களிடம அதிகம் பணம் தங்கி அவர்கள் கெட்டுப் போகாமல் பார்த்துக் கொள்ளும் ஸ்தாபனம் அரசாங்கம். திருடர்களும் இதே காரியத்தைச் செய்கின்றனர். இவர்களுடைய போட்டியை

அடியோடு ஒழித்துத்தாங்களே ஏகபோகமாய் அவ்வுரிமையை அனுபவிப்பதுதான் அரசாங்கத்தின் பெருமை'' என்று வரியால் மக்கள் வளத்தை உறிஞ்சி அதிகார அமைப்பு ஆணவதர்பார் நடத்துவது குறித்து எழுதியுள்ளார்.

மூடநம்பிக்கையைச் சாடல்; 'ஏட்டிக்குப் போட்டி' என்ற கட்டுரையில் ''மார்கழி புரட்டாசி கெட்டவை. அமாவாசை பாட்டி முகம். நவமி இவை உதவா. பரணி, கார்த்திகை, வெள்ளி, சனி, செவ்வாய் ஆகா. பின்னர் மரணயோகமும் கரிநாளும். மாதம், திதி, நட்சத்திரம், கிழமை, யோகம் எல்லாம் கூடியிருந்தாலும் ராகு காலம், தியாஜ்யம் பிரதோஷம் இந்த வேளைகள் கூடா. இவ்வளவையும் கடந்து செயல் செய்யப் போகும்போது தும்மல் தும்மினால் அன்று விடுமுறைதான்'' என்று எழுதினார். ராகுகாலம் பார்த்து நின்ற வேளையில் ராட்சச ஆட்சி தொடர்ந்து நடப்பதையும், எமகண்டம் என்று ஏங்கி நின்றபோது ஏகாதிபத்திய கெடுபிடி இறுகுவதையும், நல்ல வேளைக்காகக் காத்திருக்கும்போது நலிந்து நைந்து நாசமாகும் நிலையையும், பஞ்சாங்க ஆராய்ச்சியில் நாம் பதிந்திருந்தபோது, பரங்கிக்காரன் பிடியில் பாரதம் சிக்கிச் சீரழிந்ததையும், இடித்துக் காட்டும் வகையில் எழுதினார் கல்கி.

வளமான நடை: கவிதைத் துறையில் பாரதியார் தோற்றுவித்த திருப்பத்தை உரைநடை இயலில் உண்டாக்கியவர் கல்கி. அவர் எழுத்தினால் ஏற்பட்ட எழுச்சி, பரதேசி மொழியில் படர்ந்திருந்த மோகத்தை விரட்டி, முன்னேற்றப் பாதையில் துரித நடை போட மக்களைத் தூண்டியது. அவர் நடை செந்தமிழ் நடை அல்ல; எனினும் செழிப்பான நடை. வழக்கு நடையே எனினும் வளமான நடை.

முடிவுரை: சிந்தனையைத் தூண்டி, செயலுக்குச் சுண்டி, மரபில் மண்டிக் கிடந்த மாண்பை மக்களுக்கு நினைப்பூட்டி, எழுச்சியுற்று, ஏற்றம் பெற்று, ஏடுகாட்டிய வழியில் பீடுநடை போட, புதுமைப் பரணி பாடினார் கல்கி.

# 22. ஆனந்த விகடன்

முன்னுரை: சிரிக்கவைத்து, மக்களைச் சிந்திக்கச் செய்து, உதிர்ந்த விகடத் துணுக்குகளிலும், உரிமை வேட்கை ஊடுருவச்செய்து, அன்றாட வாழ்வோடு ஒட்டி அரசியல் உணர்வைப் பரப்பிய 'ஆனந்த விகடனின்' தொண்டு, தமிழ்ப் பத்திரிகை உலகில் தலையாய இடம் பெறும் என்பதில் ஐயமில்லை.

தோற்றமும் சிறப்பும்: 1926ஆம் ஆண்டு பிப்ரவரியில், இட்டா பார்த்தசாரதி நாயுடுவின் குமாரர்களால் நிறுவப் பெற்று, புதூர் வைத்தியநாத அய்யரை முதல் ஆசிரியராய்க் கொண்டு வெளிவந்தது. 'அடம் செய விரும்பு' என்று தொடங்கிய 'கீத்திசூடி', 'நாட்டினை எதிர்ப்பாய்' என்று 'வாழும் வழி' சொல்லி, நாட்டுப் பற்றற்றவர்களை நையாண்டி செய்தது. கதராடைச் சிறப்பையுணர்த்தும் பாடல்கள் பல வெளிவந்தன. ''கதராடை சிறந்ததேன், கதிரவனொளி சாடுவதேன் — காந்தியினால்'' என்ற இரு சொல் அலங்காரம், அதன் இதழ் ஒன்றை அணிசெய்தது. 'கதர் விற்பனை' என்ற கவிமணியின் பாடல் முதன் முதலாக ஆனந்த விகடனில் ''தமிழ் அறிஞர் பாடியது'' என்ற அறிமுகத்துடன் வெளியாயிற்று. நாமக்கல் ராம லிங்கம் பிள்ளையின் 'காந்திய சரித்திர நொண்டிச் சிந்து' விகடன் நடத்திய போட்டியில் பரிசுபெற்று வெளிவந்தது. அப்பாடல் அரசியல் போராட்டத்திற்கு நடுவே அரிசனத் தொண்டில் அந்தரங்கசுத்தியுடன் தம்மை அர்ப்பணித்த அண்ணல் காந்திக்கு அஞ்சலி செய்தது.

நாரைவிடு தூது: நாட்டை நசுக்கி நலிவில் ஆழ்த்திய வரிச்சுமையினால் வருந்திய மக்களின் பரிதாப நிலையை ''நாராய், நாராய், செங்கால் நாராய்'' எனத் தொடங்கும் நாரைவிடு தூது பாடல் மூலம் வெளிப்படுத்தியது. தம்பையா என்பவர் பாடிய இப்பாடல் வறுமையால் வாழ்வு வெறுமையானதை, வெந்த நெஞ்சில் பிறந்த வேதனைச் சொற்களில் விவரித்துக் காட்டியது.

ஆரம்பமாகாத கல்வி: ஆங்கிலேய நிபுணர் சாம்பியன் "ஆரம்பக் கல்வியைப் பரப்ப, பரவலாகப் பள்ளிகள் திறக்கப்படுவதைத் தடுத்து ஒருசில ஊர்களில் மட்டும் திறப்பதே நலம்'' என்று கூறியதை விகடன் கேலி மூலம் கண்டனம் செய்தது''. மாகாணத்தில் சிக்கனமாக ஆரம்பக் கல்வி பரப்பும் வழி என்னவென்றால், கல்வியைப் பரப்பாமல் இருப்பது என்பதே அவருடைய முடிவு'' என்று அம்பலப் படுத்தி, அக்குறிப்புக்கு 'ஆரம்பமாகாத கல்வி' என்று பொருத்தமான தலைப்பிட்டுக் கண்டனத்தைத் தெரிவித்தது.

விபரீத விளம்பரங்கள்: சர். ஏ. இராமசாமி முதலியார், லண்டனுக்குச் சென்றிருந்தபோது, தாம் பார்த்த விபரீத விளம்பரங்களைப் பற்றி இந்திய சட்டசபையில் குறிப்பிட்டார். "இந்தியாவுக்கு வாருங்கள்'' என்று விளம்பரம் செய்து 'சிப்லா' என்று தலைப்பிட்டுச் சித்தரிக்கப்பட்ட சுவரொட்டியில் கோவேறு கழுதைகளும், 'டில்லி வாருங்கள்' என்று அழைப்பு விடுத்துக் கழுதைகளும் படங்களில் தீட்டப்பெற்றிருந்தது. இதைப்பற்றி விகடன் "இவ்விளம்பரம் ரயில்வே கம்பெனியார் செய்ததா? சர்சில் முதலியவர்கள் இந்தியாவைப் பற்றிச் செய்யும் தீவிர பிரசாரத்தின் ஓர் அம்சமா? விஷமக்காரர் சிபலா அரசியல் உலகத்தையோ, டில்லி சட்டசபையையோ குறித்து இவ்வாறு விளம்பரம் செய்தார்களா?'' என்று விளக்கம் தந்தான்.

உயிர்ப்பிச்சை: 1934ஆம் ஆண்டில் சர்க்கார் தயவில் சதிராட்டம் ஆடிவந்த சட்டசபை உறுப்பினர்களின் பதவிக் காலம் மேலும் ஓராண்டு நீடிக்கப்பட்டது கண்டு விகடன் குமுறினான். "சிவபெருமான் மார்க்கண்டனுக்கு வரமளித்ததுபோல, கவர்னர் பெருமான் சட்டசபைக்கு உயிர்ப் பிச்சை அளித்தார்'' என்று கேலியாக எழுதினான்.

அறிமுகம்: கல்கி, பி. ஸ்ரீ, தேவன், தமிலன் முதலிய எழுத்தாளர்களை விகடன் அறிமுகப்படுத்தினான். பி ஸ்ரீ. அண்ணல் காந்தியடிகளின் தொண்டினை, இராமானுஜரின்

தொண்டுடன் ஒப்பிட்டு சாதித்திமிரைத் துணிவுடன் கண்டித்து எழுதினார்.

முடிவுரை: வேதனை ஒருபுறமும், வேடிக்கை ஒருபுறமும், அழுகை ஒருபுறமும், சிரிப்பு ஒருபுறமும், பரிகாசம் ஒருபுறமும், படிப்பினை ஒருபுறமுமாக பாட்டாலும், படத்தாலும், பயனான கட்டுரையாலும் விகடன் விழிப்புணர்வை ஊட்டி துடிப்புடனும் துணிவுடனும் விடுதலைத் தொண்டாற்றி வந்தான்.

---

## 23. சுதேசமித்திரன்

முன்னுரை: "ஆங்கிலம் அறியாத லட்சக் கணக்கான தமிழ் மக்களுக்கு, சிறப்பாகப் பெண்களுக்கு அரசியல் அறிவையும், சுதந்திர ஆசையையும் உண்டாக்கியது ரங்கசாமி ஐயங்காருடைய சுதேசமித்திரன்" என்று ராஜாஜி பாராட்டினார். 1882இல் திரு. ஜி சுப்பிரமணிய ஐயரால் நிறுவப்பட்ட 'சுதேசமித்திரன்' அன்று தொட்டு நாட்டு மக்களின் எண்ணங்களுக்குக் குரல் கொடுத்தது.

இடித்துரை: திருட்டுக் குற்றம் சாட்டப்பட்ட வெள்ளையரை விசாரணை செய்யும் உரிமை இந்திய அதிகாரிகளுக்கு மறுக்கப்பட்டது அவமதிப்பதாகும் என்று இந்திய சமுதாயத்தையே 1883இல் சுதேசமித்திரன் இடித்துரைத்தது. ஏகாதிபத்தியம் நடத்திய எகிப்தியப் போருக்கு ஐந்து இலட்சம் பவுன்களை இந்தியா செலுத்த வேண்டுமென்று லண்டன் பார்லிமெண்ட் தீர்மானித்தபோது ஆஸ்திரேலியாவும் மற்ற காலனி நாடுகளும் ஒரு பகுதியையேனும் ஏற்கக்கூடாதா? என்ற வினாவைச் சுதேசமித்திரன் எழுப்பியது. நீதி நிர்வாகப் பொறுப்புக்களைப் பிரிவினை செய்தால் அவசியமற்ற செலவு என்று நொண்டிச் சாக்கு கூறிய அரசுக்கு, அன்னியப் போர்களில் அளவற்ற பணத்தை விரயம் செய்வதை எடுத்துக் காட்டியது. சேலம் கலெக்டர் மக்லின் துரை குதிரைப்

பந்தயம் காணப் பெமிசளுர் சென்றதற்கான செலவும் அரசு செலவாகுமா என்று ஊழலை அம்பலப்படுத்தியது.

நிர்வாக மாற்றங்கள்: 1915இல் திரு ஜி. சுப்ரமணிய ஐயர் சுதேசமித்திரனை திரு ரங்கசாமி ஐயங்காரிடம் விற்றார் அதை அறிவித்து திரு சுப்ரமணிய ஐயர் வெளியிட்ட அறிக்கையில் தன் உடல் நலக் குறைவைக்கூறி, இனியும் தேசத்துக்கும், சக்கரவர்த்தி பெருமானுக்கும் அது மனப்பூர்வமான ஊழியத்தைச் செய்யும் எனக் கூறியிருந்தார்.

பாரதியார் மறுமொழி: காந்தியடிகளின் ஒத்துழையாமைக் கொள்கையில் பிடிப்பில்லாத சுதேசமித்திரனில் பாரதியார் பணியாற்றுவது நியாயமா? என்ற கேள்விக்குப் பதிலளிக்கும் வகையில் பாரதியார் "சுதேசமித்திரன் பத்திரிகையும் தமிழ்நாடும்" என்ற தலைப்பில் ஒரு கட்டுரை எழுதினார் அக்கட்டுரையில் "சுதேசமித்திரன் ஒன்றுதான் தேசியக் கட்சிக்கு மூல பலமாகும் சுதேசமித்திரன் காந்தியின் கூட்டத்தாரையும் புண் படுத்தாமல் ஆதரிக்கிறது. அபிப்பிராய பேதமுடையவர்களும் தேசாபிமானிகளாக இருப்பாராயின் மதித்து நடத்துவது இப் பத்திரிகை" என எழுதினார்.

நிதானம்: சுதேசமித்திரன் நிதானமான நடையையும் பாணியையும் பின்பற்றியது. நிதானம் நேர்மையின் அளவுகோல் மட்டுமல்ல; நிறைமதிக்கு அழகு என்ற நெறி நின்றது அப்பத்திரிகை. "அயோக்கியத்தனம்" என்று அடித்துக் கூறுவதற்குப்பதில், யோக்கியப் பொறுப்பற்ற போக்கு என்று கூறினால் உள்ளம் புண்படாது என்பது திரு ரங்கசாமி ஐயங்கார் கொள்கையாகும்.

எழுத்து நடை: சூட்சுமமாகக் கருத்தைப் புலப்படுத்தும் கவலையில் சுற்றி வளைத்து எழுதும் போக்கு உண்டாயிற்று. நேருக்கு நேர் எழுதாமல், நிரவல் செய்யும் பாணி வேண்டுமென்றே பின்பற்றப் பட்டதாகக் குறை கூறினர். காந்தி பத்திரிகை மீது நடவடிக்கை எடுத்தபோது எழுதியது

சொற்களைச் சடைப்பின்னல்போல் மாறி மாறிப் பின்னும் நடைக்கு எடுத்துக் காட்டாகும். சுதேசமித்திரனில் தமிழ் நடையில் தொடக்க காலத்தில் அத்துமீறி ஆங்கிலச் சொற்களும், பிற்காலத்தில் வரையின்றி வடமொழிச் சொற்களும் விளையாடின.

முடிவுரை: நடை பற்றிய வருத்தம் இருப்பினும், அக்காலத்தில் அடக்குமுறைக்கு அஞ்சாமல் தேசியக் கருத்துக்களைத் துணிவுடன் வெளியிட்டதிலும், உரிமைப்போர் வீரர்க்கு உறுதுணையாய் நின்றதிலும் அரசியல் பொருளாதாரப் பிரச்னைகளையும் தாய் மொழியில் ஆராய முடியுமென்ற நம்பிக்கையைப் பரப்பியதிலும் சுதேசமித்திரன் சிறப்பான சேவை புரிந்துள்ளது.

---

## 24. சுதந்திரச்சங்கு

முன்னுரை: ''சங்குகொண்டே வெற்றியூதுவோமே'' என்ற பாரதியின் வரிகளை முத்திரை வாசகமாகத் தாங்கி 'சங்கு சுப்பிரமணியனை' ஆசிரியராகக் கொண்டு 1932—33 ஆம் ஆண்டுகளில், முதலில் வாரமிருமுறையும், பின்னர் வாரம் மும்முறையும் வெளிவந்த 'சுதந்திரச் சங்கு' என்ற காலணாப் பத்திரிகை துணிச்சலுடன் மக்கள் உணர்ச்சிகளைத் தட்டி எழுப்பியது.

சித்திர விளக்கம்: 'இந்தியாவும் இயேசுநாதரும்' என்ற தலைப்பில் வெளிவந்த படத்தில், இந்தியாவை இயேசுநாதராகவும் வெள்ளைக் கடுதாசி பிரகடனத்தைச் சிலுவையாகவும், எமர்சன், சாமுவேல் ஹோர், வில்லிங்டன் ஆகியோரை ரோமாபுரிச் சிப்பாய்களாகவும் சித்தரித்து ஏகாதிபத்தியத்துக்கு அறைகூவல் விடுத்தது. 1—5—33 இதழில் 'என்ன விநோதம் பாரு' என்ற தலைப்பிட்டப் படம், சாமுவேல் ஹோர் காட்டிய சாகச விளையாட்டில் சாஸ்த்ரு. சாஸ்திரியார், பாத்ரோ போன்றவர்கள் மயங்கியதை எள்ளி நகையாடியது. அடக்குமுறைச் சட்டத்தை

ஆகரித்து முகம்மது யாகூப் தப்பட்டையில் தாளம் தட்ட, டில்லி சட்டசபை பெருமாள் மாடுபோல தலையசைத்து ஏற்றதை ஏளனம் செய்தது.

கேலியும் கிளர்ச்சியும்: சென்னை சட்டசபையில் 'பதில் இல்லை' 'நகல் இல்லை' என்ற விடைகளைத் தருவதில் நிபுணர்களான சட்ட மந்திரி கிருஷ்ணன் நாயரையும், ஹோம் மெம்பர் உஸ்மான் சாயபுவையும் சண்டித்து 'பிற நாடுகளில் ஒரு பொறுப்புள்ள உத்தியோகஸ்தன் இவ்வாறு பதில் சொல்வானா?' என்ற தலைப்பில் கேலியைக் கொட்டியது. 'சென்னையில் குரும்பாடு பயில்வான்களின் குஸ்தி என்ற விளம்பரம் சென்னை சட்டசபை பற்றிய தன்று; ஆட்டுக்கடா சண்டை'' என்று சென்னை சட்ட சபையின் பயனற்ற பணியைப் படம் பிடித்துக் காட்டியது' பம்பாய் சட்டசபையில் அடக்குமுறைப் பாணங்களை ஆயத்தம் செய்த அரசின்போக்கை 'சவுக்கடி மசோதா' என்ற தலைப்பில் சாடியது. மூன்றாவது வட்ட மேசை மாநாட்டினை 'முள்ளு முனையிலே மூணு குளம் வெட்டி னேன் ரெண்டு குளம் பாழ்; ஒன்றில் தண்ணியே இல்லை' என்ற நாட்டுப் பாடலுடன் தொடங்கி, நையாண்டி செய்தது.

காட்டமான விமர்சனம்: பதவிகளில் மயங்கிய மிதவாதி களின் மீது பொது மக்களுக்கு இருந்த ஆத்திரத்தை 'சாஸ்திரிகள் பேச்சு' என்ற குறிப்பில் 'பள்ளிக்கூட ஆசிரிய ராக இருந்த மகாகனம் ஸ்ரீனிவாச சாஸ்திரியார் ராஜீய உலகுக்கு வந்திருக்கலாகாது' என்று காட்டமாக விமர்சனம் செய்யப்பட்டது. ஸப்ரு, கேல்கர், ராமசாமி போன்ற 'புடலங்காய்களைப் பாம்பென நினைத்து' என்று எழுதியது. காந்தியடிகள் சட்ட மறுப்பால் கொள்ளைகள் வங்காளத்தில் அதிகரித்தன என்பதை வன்மையாகக் கண்டித்தது. லண்டனில் இந்தியா மந்திரி பணியாற்றிய 'இந்தியா ஹவுஸ்' அலங்காரத்திற்கு 1913 பவுன் இந்தியப் பணம் விரயம் செய்யப்பட்டதைக் கண்டித்தது. ரயில்வே நிர்வாகத்தின் ஊதாரித்தனத்தை வெளிப்படுத்தியது.

பரப்பரப்பான தலைப்புகள்: 'செத்தல் வாடுவின் காய்ந்த வத்தல்' 'துரைச்சித்தம் க்ஷணப்பித்தம்', 'குரங்காட்டி மந்திரி', 'ஷோக்குப் பிள்ளை போக்கு', 'மீசைக்குப் பூசை போடல்'. 'அவலும் உமியும் ஊதித்தின்போம்' என்பவை போன்ற பரபரப்பான தலைப்புக் குறிப்புகளில் பலமான தாக்குதல்களைத் தொடுத்தது.

முடிவுரை: இப்பத்திரிகை, நடைத்தூய்மையை விட துடிப்பையும், சொல்செழுமையை விட சூட்டையும் பெற்றிருந்தது. வேகமான எழுத்தாலும் விளக்கமான குறிப்புகளாலும் தேசிய ஏடுகளில் சுதந்திரச் சங்கு சிறப்பான இடத்தைப்பெற்றது.

## 25. அன்றைய பத்திரிகைகள் — பொதுக்கண்ணோட்டம்

முன்னுரை: பாரதியாரின் இந்தியா திரு. வி. க. வ. வெ. சு. தலைமையில் 'தேசபக்தன்' திரு வி.க வின் நவசக்தி, டாக்டர் வரதராசலுவின் தமிழ்நாடு, ரங்கசாமி ஐயங்காரின் சுதேசமித்திரன், சொக்கலிங்கம் தலைமையில் தினமணி, கல்கி தலைமையில் ஆனந்தவிகடன் ஆகியவை தமிழையும் தேசியத்தையும் வளர்த்தன.

ஏனைய ஏடுகள்: இவை தவிர டி. எஸ் எஸ்ஸின் காந்தி சங்கு சுப்பிரமணியத்தின் சுதந்திரச் சங்கு, பரலி சு. நெல்லையப்பரின் லோகோபகாரி, ராய சொக்கலிங்கத்தின் ஊழியன், வ. ராவின் வர்த்தகமித்திரன், சுதந்திரன், கிருஷ்ணசாமிப் பாவலரின் தேசபந்து ஆகியவை தேசிய முரசு கொட்டின. பல்வேறு அடக்குமுறைகளுக்கிடையில் அவை வெளி வந்தன.

சட்டத்தின் விளைவு: 1876இல் தாய்மொழிப் பத்திரிகைச் சட்டம் நிறைவேற்றப்பட்டபின், அதிகாரி

களின் அடக்கு முறைகள் அதிகமாயின. 'அக்காலத்தில் பத்திரிகை நடத்துவது நெருப்பாற்றின்மீது மயிர்ப் பாலத்தில் நடப்பதை ஒத்திருந்தது என்று தாருல் இஸ்லாம் பத்திரிகையின் ஆசிரியர் குறிப்பிட்டிருந்தார்.

உரிமை உணர்வு: சத்தியவர்த்தமானி, சுதேசபூஷணி, வெற்றிக்கொடியான் என்பன 19ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் உரிமை உணர்வை ஊட்டின. அமிர்தவசனி அரசு ஊழியர்கள் மக்களுக்கு அநீதி இழைப்பதில் கூட்டு சேரும் கொடுமையை எதிர்த்தது. விக்டோரியா அரசியாரின் பதவி ஏற்புக்கு வீண் செலவு செய்ததைத் தினவர்த்தமானி கண்டித்தது. தென்னிந்தியாவில் மட்டும் இந்தியர் நீதிபதிகளாக நியமிக்கப்படாத கொடுமையை வெற்றிக் கொடியோன் வேதனையுடன் எழுதியது.

விமரிசனங்கள்: 1877இல் சுப்பிரமணிய சிவா வெளியிட்ட ஞானபானு, ஞானவிநோதினி, 1879இல் வெளியான திருவாங்கூர் அபிமானி, தத்துவவிவேசினி ஆகிய பத்திரிகைகளும் உள்ளூர்ப் பிரச்னைகளை உரிமை உணர்வுடன் விமரிசித்தன மக்கள் வறுமையில் வாடும்போது ஊரு ஊரு உதகை சிலமாதங்களுக்கு அரசின் தலைநகராக வேண்டுமா? என்று தத்துவ விவேசினி கேள்வி எழுப்பியது. சென்னை மாகாணம் ஒரு கொலைக் களமாகி விட்டது என்று காரைக்குடியிலிருந்து வெளிவந்த வைசியமித்திரன் எழுதியதற்காக அரசு வழக்குத் தொடுத்தது. பதிப்பாளர் மன்னிப்பு வேண்டி, ஆசிரியர் பதவி விலக்கம் செய்யப்பட்டதும் அரசு வழக்கைத் திரும்பப்பெற்றது.

தேசபக்தன்: 1919இல் தேசபக்தன் இதழில் வெளியான ஓர் உருவகக் கதையில், மயில் ஆங்கிலேயரையும், மலைப் பாம்பு ஜெர்மனியையும், அன்னை இந்திய நாட்டையும், தாயின் மூத்தமன் திலகரையும் உணர்த்தும் வகையில் வரையப்பட்டிருந்ததற்காக நடவடிக்கை எடுக்க அரசு பரிசீலனை செய்துபின் கைவிட்டது ''என்று நாம் யாவர்க்கு மிடைவோமல்லோம், இரு நிலத்திலெமக்கெதிராவாரு மில்லை'' என்ற அப்பர் வாசகை முத்திரை வாசமாகத்தாங்கி

வந்த இக்காலணாப் பதிப்பு, காரசாரமான கருத்துக் களையும், வேகமான விமரிசனங்களையும், கூரான குத்தலான நடையில் வெளியிட்டது ஹாலிபாக்ஸ் பிரபுவை, 'கோட்டான்களிடைக்கூல்' என்றும், இந்தியாவை இழித்துப் பேசிய ஆங்கிலேயரை 'உண்ட வீட்டில் செண்டி தூக்காதே' என்றும் தனுஷ்கோடியில் பயணிகளைத் துன்புறுத்திய கஸ்டம்ஸ் துறையினரை 'கஷ்டம்ஸ் இலாகா' என்றும் எழுதிய விறுவிறுப்பான தலைப்புகள் பத்திரிகைக்கு வேகம் ஊட்டின.

மொழி வளம்: தமிழ்ப் பத்திரிகைகள் சங்கிரகம், ஜாமீன், க்ஷேமம், உபந்யாசம், நிஷ்பிரயோஜனம், வியக்ரம் லோகசாந்தி, ஷம்மேளன அங்குரார்ப்பணம் போன்ற வடமொழிச் சொற்களை வாரி இறைத்தன. திரு.வி.க வின் தேசபக்தனும், நவசக்தியும் செம்மையான நடை, செறிவான கருத்துக்கு முரண்பட்டதல்ல என்பதை நிலைநாட்டின.

முடிவுரை: ஐம்பது ஆண்டுகளுக்கு முன்பு பத்திரிகை களில் எழுதப்பட்ட நடையை விட இன்றைய நடை செம்மையானதாகவும் சிறப்பானதாகவும் அமைந்துள்ளது. ஆயினும் ஆதரவு அதிகமில்லாத நேரத்தில் அச்சுறுத்தலுக்கு ஆளான நிலையிலும் அன்றைய பத்திரிகைகள் தமிழுக்கும் தாய் நாட்டுக்கும் மகத்தான தொண்டாற்றியுள்ளன என்பதை நன்றியுடன் நாம் பாராட்ட வேண்டும்.

---

## 26. மேடையில் விடுதலை முழக்கம்

முன்னுரை: பத்திரிகைகளைப் படிக்கும் பழக்கத்தில் மேனாட்டுடன் ஒப்பிட்டால் நம் நாட்டு நிலை மிகவும் பின் தங்கியதாய் உள்ளது. ஐம்பதாண்டுகளுக்கு முன்பிருந்த நிலை மிகவும் சோர்வளிப்பதாகும். தேசிய இயக்கத்தால் தாய் மொழிப்பத்திரிகைகள் அதிகமாக விற்பனையாயின. பத்திரிகைகள் மிகக் குறுகிய வட்டாரத்தைக் கவர்ந்த

நிலையில் பட்டி தொட்டிகளிலும் தேசிய முழக்கம் செய்ய மேடைப்பேச்சே பயன்பட்டது.

சுப்பிரமணிய சிவா : கனல்கக்கும் உரைகளால் அரசைக் கலக்கியவர் சுப்பிரமணிய சிவா. 1921 மதுரையில் "ஆங்கிலேயர் கொள்ளைக்காரர்கள், இராவணனை விடக் கொடியவர்கள், அவர்கள் நடக்கும் இடத்தில் புல் கூட முளைக்காது; கிளைவ் பொய்க்கையெழுத்திட்டு, இந்தியாவைக்கைப்பற்றி விட்டார்" எனப்பேசினார், இப்பேச்சுக்கு அவர் மீது வழக்குத்தொடுக்கப்பட்டது. அதே ஆண்டு தஞ்சையில் "ஒவ்வொரு மாநிலத்திலும் ஜாலியன் வாலாபாக் நடந்தால் நாட்டில் சக்தி பிறிட்டெழும்; கைப்பிடி அளவுள்ள ஆங்கிலேயரை விரட்ட 33 கோடி இந்தியரால் முடியாதா" என்று அறை கூவல் விடுத்தார். இப்பேச்சின் மேல் நடவடிக்கை எடுக்கும் ஆலோசனையை அரசு கைவிட்டது.

வ. உ. சிதம்பரம்: மேடையில் ஏறிவிட்டால் உணர்ச்சி வசப்பட்டு உரையாற்றும் வேகத்தால் துன்பங்களுக்கும், அரசின் தாக்குதல்களுக்கும் ஆளாக நேரிட்டதால் மேடைப் பேச்சைக் குறைத்துக்கொள்ள முயன்றதாக வ. உ. சி. கூறினார். சிதம்பரனாரின் ஆவேசப் பேச்சுக்களினால், தேசபக்திக்கனல் கொழுந்துவிட்டெரிந்தது. "பேச்சுக்குப் பிள்ளை" என்பது அவர் காலத்தில் வழங்கிய புகழுரை. சிவாவும் சிதம்பரனாரும் ஆற்றிய உரைகள் அரச நிந்தனையைப்பரப்புவனவாக அமைந்தன என்று அவர்கள் மீது தொடரப்பட்ட வழக்கின் எதிரொலி இங்கிலாந்தில் பாராளு மன்றத்திலும் கேட்டது.

பேச்சாளருக்குப் பரிசுகள் : "அரசியல் என்பது பாட்டும் பேச்சும் அல்ல. தியாகமும் செய்யவேண்டும். இன்று பிரசங்கமேடை, நாளை தூக்கு மேடை, இன்று கழுத்தில் பூமாலை, நாளை கழுத்தில் சுருக்குக்கயிறு. இவ்வாறு எதையும் தாங்கும் இதயம் படைத்தவர்களே அரசியலில் வர முடியும்" என்று ஜீவானந்தம் எடுத்துக்காட்டினார்.

பேச்சாளர்கள்: சிதம்பரம் பிள்ளை, சிவா, வ. வெ. சு., பாரதியார், திரு. வி. க., பெரியார் ஈ. வெ. ரா., வரதராசுலு. சத்யமூர்த்தி, ராஜாஜி, பசும்பொன் முத்து ராமலிங்கத் தேவர், ம. பொ. சி போன்ற தலைவர்களும், அடுத்த வரிசையில் கோவை அய்யாமுத்து, அண்ணாமலைப் பிள்ளை, கோடையிடிக் குப்புசாமி முதலியார், நெல்லை சோமயாஜுலு, மதுரை சிதம்ப பாரதி, வேலூர் உபய துல்லா, கோவை சி. பி சுப்பைய்யா, டி. செங்கல்வராயன் உட்பட எண்ணற்றவர்களும், மேடைத்தமிழ் மூலம் விடுதலை வேட்கையைப் பரப்பினார்கள்.

பாரதியின் உணர்ச்சி உரை: விபின் சந்திர பாலரின் விடுதலையைக் கொண்டாட 1918 மார்ச் 9-ஆம் தேதி சென்னையில் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில் ''சுதந்திர தாகம் என்று தணியும்? அடிமையின் தளைகள் என்று அகற்றப்படும்? மகாபாரதப்போரை உருவாக்கிய கடவுளே; பிளேகும் பஞ்சமும்தான் உன் பக்தர்களுக்குக் கிடைக்கும் பரிசா!'' என்று பாரதியார் பொருமினார். ''அன்னியர் இயற்றிய சட்டங்களுக்குக் கட்டுப்படுவோம். ஆனால் பிறப்புரிமைக்கு முரணான சட்டங்களுக்குப் பணிய மாட்டோம்'' என்று முழங்கினார்.

முடிவுரை: இவ்வாறு பல்வேறு தேசபக்தர்கள், மேடைப்பேச்சின் வாயிலாக, தேசியத்தையும் வளர்த்தனர். தமிழையும் வளர்த்தனர், மேடைப் பேச்சில் புதிய மாற்றம் ஏற்பட்டது.

---

## 27. திரு. வி. க. பேச்சு

முன்னுரை: தூய செம்மையான தமிழில் பேசி நல்லிய மாக அரசியல் கருத்துக்கள் துலங்கச்செய்து, படித்தவர் களை மட்டுமல்ல, பாமரரையும் ஆட்கொள்ள முடியும் என்பதை 1920 ஆம் ஆண்டுக்கு முன்பே நிலை நாட்டியவர் திரு. வி. க. நம்நாட்டின் பழம்பெருமையை நினைவூட்டி,

மக்களிடையே உரிமை வேட்கையை எழுப்புவதை அவர் குறிக்கோளாகக் கொண்டார்.

பேச்சே கவிதை: தமிழர் அரசியல் மாநாடுகளில் அவர் நிகழ்த்திய பேச்சுக்கள் கருத்துச் செறிவும் சொல்வளமும் கொண்ட கவிதைகள் எனலாம். காஞ்சி மாநாட்டில் அவராற்றிய தலைமைப் பொழிவு அவர் பேச்சின் சீரிய பாங்கினுக்குச் சிறந்ததோர் எடுத்துக்காட்டு. "வகுப்பு வேற்றுமையும் காழ்ப்பும் கனன்றெரியும் இவ்வேளையில் தமிழ்நாட்டின் முப்பத்தோராவது அரசியற் பெருங்கழகம், உலகன்னையார் முப்பானிரண்டறம் வளர்த்த இக்காஞ்சி யம்பதிக்கண் இன்று கூடி இருக்கிறது" என்று இடத்தையும் காலப்பின்னணியையும் குறிப்பிட்டார். "நம் மக்கள் வாழ்வே தமிழ் வாழ்வு. அவர்கள் கண்டது தமிழ்; கேட்டது தமிழ்; உண்டது தமிழ்; உயிர்த்தது தமிழ்; உற்றது தமிழ்" என்று பெருமிதம் கொண்டார். தமிழ்த் தாயிடம் உரிமை உணர்வுபெற செல்லவேண்டும் எனக்கூறி, தமிழுக்கும் தேசியத்திற்கும் உள்ள தொடர்பை உணர்த்தினார் "இரட்டை ஆட்சியிலுள்ள குறைகளைச் சொல்லிச் சொல்லி நாவும் தழும்பேறிவிட்டது! எழுதி எழுதிக் கையும் மரத்து விட்டது" என்று சலித்துக்கொண்டார் 'மண்டைக் கனம் பிடித்தவர்' என்று சொல்லாமல் 'தலை வீங்கப் பெற்றிருக்கும் சிலர்' என அழகுறக் கூறினார். சுயராஜ்யம் என்பது பூவினிற் கந்தம் பொருந்தியது போல், அவரவர் பால் மருவி விளங்குவது என்று தெளிவுபடுத்தினார்.

தாய்மொழிப் பற்று: தேசிய உணர்வுக்கு அடிப்படையாகத் தமிழ்ப்பற்று வளரவேண்டும் என்றார். "பொது வினைகள் யாவும் நாட்டு மொழியிலேயே நடைபெறுதல் வேண்டும்" என்றார். "நாட்டு மொழியிடம் பற்றின்றி நாட்டுக்குச் சேவை செய்வது விழலுக்கு நீர் பாய்ச்சுவதாகும்" என்பது அவர் முடிவு. பண்டைய வழக்கில் ஆர்க்காடு என்றும், புராண வழக்கில் ஆறுகாடு என்றும் அழைக்கப்பட்டு வந்தது, இதுகாலை ஆற்காடு என்று மருவி

வழங்குவதைக் கண்டு மனம் வருந்தினார். உரிமை பெற்றதும் பெயர்மாற்றம் நிகழும் என்று 1921இல் அவர் கூறியது இன்று நடைபெற்று வருகிறது.

பழமையின் சாயல்: அவருடைய பேச்சுக்களில் அரசியல் முற்போக்கு முனைந்து நின்ற போதிலும் இடையிடையே பழமையின் சாயலால் காலத்துக்கு ஒவ்வாத சில கருத்துக்களும் ஊடோடின. 1914இல் உலகப்போர் மூண்டது பற்றி ''இந்த மகாயுத்தம் மக்கள் உரிமைக்காகக் கடவுளால் உண்டாக்கப்பட்டது'' எனக்கூறினார்.

அரசியல் தெளிவு: பெரும்பாலும் அவருடைய கருத்துக்களில் அரசியல் தெளிவு மேலோங்கியுள்ளது ''சட்ட சபைக்குக் குப்பைக்கூளங்களை அனுப்பினால் அதிகார வர்க்கத்தார் ஆதிக்கம் பெருகும்'' என்று எச்சரித்தார். ''குடிமக்கள் அரசியல் ஞானம் பெற்று தக்கார் தகவிலர் எனும் வேற்றுமை கண்டு பிரதிநிதிகளைத் தெரிந்தெடுக்கும் அறிவு பெறல் வேண்டும்'' என்று அறிவுறுத்தினார்.

பேச்சு நடை: திரு.வி.க வின் தமிழ்ப் பேச்சு நடையில் தூய்மையும் துடிப்பும் துலங்கின. அரசியல் கூர்மை, அற வழி நேர்மையை அணைத்துச் சென்றது. தெளிவோடு குழைவு இணைந்தது. கண்ணியம் கடுமையைத் தவிர்த்தது. அன்பு சுரக்க, அறிவு சிறக்க, உளம் விரிய, உரம் பெருக, உணர்வு உறுதி ஒங்க, தூண்டுதலாகவும் துணையாகவும் நின்றது அவர் நடை. அவர் பேச்சே இலக்கியமாகக் கனிந்தது.

முடிவுரை: தேசியமும் தமிழும் இரண்டறக் கலந்து இலட்சியத்தின் உச்சவெளிப்பாட்டுக்கு உந்திச்செல்லுமாறு திரு. வி. க. நடை அமைந்தது. தமிழ் மேடைப் பேச்சு இலக்கியத்தில் தகைமைசால் தலைமையை நிலைநாட்டியவர் திரு. வி. க.

# 28. வ. வே. சு. ஐயர்

முன்னுரை: ''கற்கக்கற்கக் கம்பனைப் போன்ற கவிச் சுவையளிக்கும் கவில்பெறு நண்பா! வீரக்கனலே, வித்தகச் சுடரே, தியாகமென்னுந் தெய்வக்கனலில் புடம் வைத்து ஒளிரும் பொன்னே'' என்று சுத்தானந்த பாரதியாரால் போற்றப்பட்டவர் வ. வெ. சு. ஐயர் ஆவார். வைதீக குடும்பத்தில் பிறந்த இவர், தெய்வீக நெறியாகத் தேச பக்தியை ஏற்று இறுதிவரை தாய்மொழிக்கும், தாய் நாட்டிற்கும் தளராத தொண்டாற்றினார்.

இந்திய வாழ்க்கை நெறி: ''ஐரோப்பிய கலை வாழ்வு, இலக்கியங்கள் எனக்குப் பிடித்தாலும் ஐரோப்பிய சமுதாய வாழ்க்கை பிடிக்கவில்லை இல்லற வாழ்வில் நம் பாரத சமுதாயமே சர்வோத்தமமானது அங்கு 'தானே' முதலில், 'பிறகே பிறர்'. அது போக பூமி; நமது தேசம் தியாக பூமி'' என்று இந்திய வாழ்க்கை நெறியை வ. வெ. சு. ஐயர் புகழ்ந்துரைத்தார்.

வீரநெறி: லண்டனில் அவர் சட்டப்படிப்பு பயின்ற போதே, பாரதியாரின் 'இந்தியா' பத்திரிகைக்கு வாரந் தோறும் எழுதிய லண்டன் கடிதமும், ராணி லஷ்மிபாய், கரிபால்டி வாழ்க்கைக் குறிப்புகளும் தேசியத் துடிப்பை ஊட்டின. ''வீரதருமமே நமக்கு வேண்டும். எனக்கு வசிஷ்டாதி முனிவரை விட இராமனையும் குரு கோவிந் தனையுமே அதிகம் பிடிக்கும்'' என்று வீர நெறியை வணங்கினார். சுத்தானந்த பாரதியார் 'வீர விளக்கு வ. வே. சு. ஐயர்' என்னும் நூலில் 'பாரதமாதாவின் வீரத்திருலங்களில்' ஒருவர் என்று பாராட்டுகின்றார்.

காந்தியடிகள் சந்திப்பு: இங்கிலாந்தில் காந்தியடிகள் தீபாவளிக் கொண்டாட்டத்திற்குத் தலைமைதாங்க அழைக்கப்பட்டார். டி எஸ் எஸ். ராஜன் ஐந்தாறு பேர் உதவியுடன் சமையல் செய்து கொண்டிருந்தார். அப்போது காந்தியடிகளைத் தண்ணீர் கொண்டு வரவும், பாத்திரம்

கழுவவும் பயன்படுத்திக் கொண்டிருந்ததைக் கண்டு வ. வே. சு. ஐயர் திடுக்கிட்டுக் கூவினார். எல்லாரும் திடுக்கிட்டனர். இந்நிகழ்ச்சியைக் கூறி "மோகனதாசர் என்னை மோகனாஸ்திரத்தால் அப்போதே வசப்படுத்தி விட்டார்" என்று வ. வெ. சு. மெய்சிலிர்க்கிறார்.

இலக்கியத் தொண்டு: வி. வி. எஸ். என்ற ஆங்கில எழுத்துக்களுக்கும் பொருந்துமாறு வி. விக்ரம்சிங் என்று பெயர் பூண்டு லண்டனிலிருந்து தப்பி, பற்பல வேடங்களை தாங்கி இறுதியில் புதுச்சேரி வந்தடைந்தார். வாழ்வின் வீரமும் கம்பீரமும் துணிவும் தெளிவும் அவருடைய எழுத்துக்களிலும், பேச்சிலும் எதிரொலித்தது. புதுவையில அவர் இருந்தபோது 'மங்கையர்க்கரசி காதல்', 'கமல விஜயம்' 'காங்கேயன்', 'குளத்தங்கரை அரசமரம்' ஆகிய சிறுகதைகளை ஆக்கியதோடு குறளை ஆங்கிலத்தில் மொழி பெயர்ப்பதிலும், எமர்சனின் 'தன்னம்பிக்கை'யைத் தமிழாக்கம் செய்வதிலும், புக்கர் வாஷிங்டன் வரலாற்றை தமிழில் எழுதுவதிலும் ஈடுபட்டார். 'கம்பநிலையம்' என்ற பிரசுர நிலையத்தின் மூலம் பலநூல்களை வெளியிட்டார்.

தேசபக்தனில் தொண்டு: 1919இல் திரு. வி. க வுக்குப் பின் தேசபக்தன் ஆசிரியர் பொறுப்பை ஏற்று நடத்தினார். தலையங்கங்கள் துடிப்பு மிக்கவையாய் இருந்தன. தமிழ் நடையைப் பொறுத்தவரை திரு வி. க வின் தெள்ளு தமிழ் நடைக்கும், வ. வெ. சு.வின் வடமொழியையும் கொள்ளு தமிழ் நடைக்கும் பெருத்த வேறுபாடு இருந்தது. தேசபக்தனில் எழுதிய 'அடக்குமுறை' என்ற தலையங்கத்திற்காக ஒன்பது மாதம் பெல்லாரி சிறையில் இருந்தபோது 'கம்பனைப் பற்றிய ஆய்வு' என்ற அரிய நூலை ஆங்கிலத்தில் எழுதத்தொடங்கினார்.

ஏமாற்றம்: சேர்மாதேவி குருகுலத்தை நிறுவி நிர்வகித்து வந்த கட்டத்தில் சுத்தானந்த பாரதியாருடன் சேர்ந்து வ. வே. சு. 'பால பாரதி' என்ற தரமான மாசிகையை நடத்தினார். பழம் பெருமையுடன் அறிவியல் புதுமைகளையும் வெளியிட்டார். ஆனால் தாம் எதிர்ப்

பார்த்த ஐயாயிரம் சந்தாதாரர்க்கு மாறாக, எழுநூறு சந்தாதாரே சேர்ந்தது அவருக்கு ஏமாற்றத்தையும் வருத்தத்தையும் தந்தது.

எழுத்து பேச்சு நடை: ஹிந்து முஸ்லீம் வேற்றுமையின்றிப் பாடுபடுமாறு அறிவுறுத்தினார். அவர் பேச்சிலும் எழுத்திலும் வடமொழிச் சொற்கள் கணக்கு வழக்கின்றி விரவியிருந்தன. 'தர்ஜுமா', ஸஹன சக்தி' போன்ற சொற்களை அடிக்கடி பயன்படுத்தினார். பன்மொழி பயின்ற வ. வெ சு. ஆங்கிலச்சொற்களை அடியோடு தவிர்த்து தாய்மொழிச் சொற்களைக் கையாளுவதில் மிகுந்த கண்டிப்புக் கொண்டிருந்தார். எளிமையோடு எழிலை வளர்க்கும் நடையில் பற்றுதல் கொண்டார்.

முடிவுரை: மொழியார்வம், முதிர்ந்த நாட்டுப்பற்று, முனிவர்க்குரிய மனப்பக்குவம், வீரனுக்குரிய வேகம், நியாயவாதிக்குரிய நிதானம், பழமையில் பக்தி, புதுமையில் ஆர்வம், தொண்டுள்ளம், தியாகசிந்தை ஆகியவற்றின் உருவமான வ. வெ. சு வின் வாழ்க்கையே ஒரு தமிழ் இலக்கியம்.

---

## 29 சத்தியமூர்த்தி

முன்னுரை: தமிழ் நாட்டு அரசியல் பேச்சு மேடையில் தமக்கென்று தனியொரு பாணி வகுத்துக்கொண்டு, படித்தவர்களையும் பாமர மக்களையும் ஈர்த்தவர். நாவன்மைக்குப் பெயர் சத்யமூர்த்தி என்று நாட்டினரால் போற்றப்பட்டவர். ஆங்கிலம், தமிழ், இருமொழிகளிலும் அழகாகப் பேசும் ஆற்றல் கொண்டவர் சத்தியமூர்த்தி.

தமிழ்ப் பேச்சு: தொடக்க கட்டத்தில் ஆங்கிலத்தில் பேசி வந்த இவர் 1910 மதுராந்தகத்தில் கூடிய கூட்டுறவு மாநாட்டில் தமிழில் பேச முயன்றார். பல ஆங்கிலச் சொற்கள் கலந்த மணிப்பிரவான நடையில் அப்பேச்சு

அமைந்திருந்தது. பழக்கத்தாலும் பயிற்சியாலும் தமிழ்ப் பேச்சில மெருகேறியது. 1919—20இல் தமிழ் நாட்டில் தமிழில் பேசாத பெரிய கிராமமே இல்லை என்னும் அளவுக்குச் சூறாவளிச் சுற்றுப் பயணம் செய்தார். மூன்று நான்கு மணி நேரம் அவர் தொடர்ந்து பேசுவதை மக்கள் அக்கறையுடன் செவி சாய்த்தனர்.

வடசொற் கலப்பு : சத்தியமூர்த்தி தான் பேசும் தமிழில் நூற்றுக்கு ஐம்பது வார்த்தைகள் வடமொழியாக இருக்கும் எனக் கூறினார். தமிழுடன் வடமொழி கலப்பது முத்தும் பவளமும் சேர்த்துக் கோர்த்த மாலை என்றும், அதிரமயமான தொனி ஏற்படும் என்றும் கூறினார். ஆங்கிலத்தில பேசுவதே அழகு என்று இருந்த நிலையில், கரடு முரடான தமிழில் புலவர்கள் செப்படி வித்தை செய்த வேளையில தமிழ், மக்களிடையே பரவுவது அரிதாக இருந்தது. இந்நிலையில அரசியல் பொருளாதாரப் பிரச்னைகளில் தமிழ்நடை பரவலாகப் பக்குவமடையாததால், வடமொழிச் சொற்களைப் பயன்படுத்துவது விலக்க முடியாததாய் இருந்திருக்கலாம்.

சத்தியமூர்த்தி பேச்சு : சத்தியமூர்த்தி பேசிய தமிழ் சக்தி வாய்ந்த தமிழ்; சண்ட மாருதத் தமிழ் என்பதில் ஐயமில்லை. அவர் பேச்சிலிருந்த வடசொற்களை நீக்கிப் பதிப்பித்தால் அது செந்தமிழ்ப் பேச்சாய் இருக்குமே ஒழிய, சத்தியமூர்த்தி பேச்சாய் இராது. 1920—30 ஆண்டுகளிலேயே தமிழ்ப் பேச்சால மக்களைத் தட்டி எழுப்பித் தொண்டாற்றிய சத்தியமூர்த்திக்கு மேடைத் தமிழ் வரலாற்றில் மேலான இடம் உண்டு. அவர் பேச்சில வேகமும். பெருமிதமும் கேலியும் குத்தலும், ரசனையும் இருந்தன.

பயன்படுத்திய தொடர்கள் : தமிழர் அரசியலில் மெத்தனமாய் இருந்து விடக்கூடாது என்பதை வலியுறுத்த இராமன் ஆண்டால் என்ன இராவணன் ஆண்டால் என்ன என்று இருக்கக்கூடாது. என்ற தொடரை அடிக்கடி பயன்

படுத்தினார். 'உள்ளமிகை நெல்லிக்கனிபோல்' என்பது அவருக்குப் பிடித்தமான தொடர். 1920ஆம் ஆண்டில் வைஸ்ராயை 'சில்லறைத் தேவதை' என்று துணிவுடன் சித்தரித்தார்.

வாதத் திறமை: வாதங்களைத் தகர்க்கும் வலிமையுடன் அமைந்திருந்தது அவர் பேச்சு. அதில் சூடும் சுவையும் ஏறியிருந்தன. "நமக்கு சுயராஜ்யத்தின் வாசனை தெரியாது எனக் கூறுபவர் காரியக் குருடர்" என்று சாடினார். "கடவுள் படைப்பில் வேறுபாடில்லை. லண்டனில் நமது ஜார்ஜ் அரசரை நான் பார்த்தபோது இரண்டே கால்கள்தான அவருக்கு இருந்தன" என்று பாமரருக்குப் பதியும்படி பேசினார் "சர்க்கார் ஊழியர்கள் கடமைகளை மறந்து, தாங்களே ஈசுவரன் என்று நினைத்துக் கொண்டு அந்தர் தர்பார் நடத்துகின்றனர்" என்று அன்னிய அரசாங்க அதிகாரிகளின் ஆணவப் போக்கினுக்கு அடி கொடுத்தார்.

இசைப் பற்று: சிக்கல் மிகுந்த அரசியல் பிரச்னைகளையும் சிக்கனத்துடன் அலசி ஆராய்ந்து பேசினார். "அவதாரங்களைப் பற்றி பாடுவதற்குப் பதில் இயற்கை அழகைப் பாடவேண்டும். புரியாத மொழியில் பாடாமல் பாரதியின் தேசிய கீதங்களைச் சேர்த்துப்பாட வேண்டும்" என்றார். கச்சேரிக்கு வந்திருப்போரும் சேர்ந்து பாடக் கூடிய கூட்டுப் பாடலாக 'வாழிய செந்தமிழ்' என்னும் பாரதியார் பாடலைக் குறிப்பிட்டார்.

முடிவுரை: தமிழார்வம், தேசிய உணர்வு, கருத்துத் தெளிவு, நடைவேகம், உணர்ச்சிப் பெருக்கு ஆகியவை மண்டிக்கிடந்த பேச்சுக்களால் சத்தியமூர்த்தி தமிழக வரலாற்றில் தனியொரு இடம் பெற்றுள்ளார். சத்தியமூர்த்தியின் பேச்சு சர்க்கரைப் பந்தலில் பொழிந்த தேன் மாரி என்று கூறுவது பொருத்தமாகும்.

# 30. இராஜாஜி—சிறையில் தவம்

முன்னுரை: சுதந்திர இந்தியாவின் சிற்பிகளில் ஒருவராகவும், தம் கூர்மையான அறிவையும் கொள்கைப் பிடிப்பையும், ஆன்மபலத்தையும் ஆற்றல் வளத்தையும் தூய சிந்தையையும் தொண்டு உள்ளத்தையும், நாட்டுக்குக் காணிக்கை ஆக்கி, தமிழ் நாட்டு மதிநுட்பத்துக்குத்தரணி யெங்கும் புகழ் ஈட்டித்தந்த இணையற்ற மேதை ராஜாஜி ஆவார். அவர் பேச்சும் எழுத்தும் மக்கள் மனத்திற்கு உரமிட்டு, தனியொரு மரபையே உருவாக்கின.

பேச்சு நடை: ராஜாஜி அரை நூற்றாண்டுக்கு மேலாக தமிழ் மக்களைத்தம் பேச்சாலே ஆட்கொண்டார். வெறியூட்டும் வகையில் பேசாமல் வாழ்வுக்கு விளக்கம் தரப் பேசினார். அறிவும், ஆர்வமும், அன்பும் அமைதியும் நிறைவும் நிதானமும், பரிவும் பண்பும், சொற்களாக உருவாகி, உள்ளத்தோடு உறவாடி, உய்யும் நெறி உணர்ந்து, உயரும் வழியில, ஊரார்க்கு உறுதுணையாய் நின்றன.

வாதத்திறமை: சட்டசபை மறுப்பை மகாத்மா காந்தி வற்புறுத்திய நேரத்தில் மன்றங்களுக்குச் சென்று பதவி ஏற்று நன்மை செய்ய முடியுமென்று ஒரு பிரிவினர் வற்புறுத்தினர். அப்போது "சட்ட மறுப்பு இல்லாவிடில் சட்ட சபைக்குப் போவோம் என்பது 'காசிக்குப்போக முடியவில்லை என்றால் கள்ளுக்கடைக்காவது போகலாம் வா' என்று அழைப்பதற்குச் சமம்" என்று தைக்கும் சொல் சொல்லி அவர்கள் வாதங்களைத் தகர்த்தார் 'தேசபந்து தாசர் ராமபிரானுக்கு ஒப்பானவர். ராமன் மாயமான் வேட்டையாடி வேதனைப்பட்டதைப் போல சட்டசபை வேட்டையால் அனர்த்தம் தான் விளையும்" என்று புராணக் கதையைப் பொருத்தமாகக் கையாண்டு புதுமைப் போதனையைப்பதமாகச் செய்தார். 1926-இல் நடந்த தேர்தல்களில் காங்கிரஸ் பெரும்பான்மை பெற்றும், அமைச்சரவை அமைக்க அவர்களை அழைக்காமல், மக்களால் மறுக்கப்பட்டவர்களை அழைத்ததைக்

கண்டித்து, கோவை பொதுக்கூட்டத்தில் பேசினார்." "தேர்தல் பந்தயத்தில் வெற்றி பெற்ற காங்கிரஸ் குதிரைகளுக்குரிய சேணத்தை கழுதைகளுக்குப் போட்டிருக்கிறார் கவர்னர்" என நகைச்சுவையுடன் கூறினார்.

நூலுரை: மதுவிலக்குப் பிரச்சாரத்தைப்பற்றி "இடறி விழுவதற்குக்குழிகள் தோண்டிவிட்டு, அவற்றின் அருகில் குழந்தைகளை விளையாட விட்டு எச்சரிக்கையாய் இரு என்பதைப் போன்றது" என்றார். "அரசியல் தகப்பனாரைப் போன்றது; தர்மம் தாயாரைப் போன்றது. இரண்டும் இணைந்து இருந்தால்தான் இல்லறம்" என்று நல்லறம் நாட்ட, நயமான உரை நவின்றார். காலத்திற் கேற்ப கருத்துமாறும் என்பதை "மாவடுவாக இருக்கும் போது துவர்க்கும்; காயாகும்போது புளிக்கும்; கனியாகும் போது இனிக்கும் ஆனால் பழவகை மூன்றல்ல; ஒன்றேதான்" என்றார்.

பத்தரைமாற்றுத் தங்கம்: ரசிகமணி டி. கே. சி. ராஜாஜியைப் பத்தரை மாற்றுத்தங்கம் என்று பாராட்டினார். துணிவும் தெளிவும், துடிப்பும் தூய்மையும், தேசியமும் தமிழுணர்வும், இணைந்து ஒங்கின ராஜாஜி பேச்சில். அவர் தலைசிறந்த தமிழர்; இணையற்ற இந்தியர்; உலகப் பெருமக்களில் உயர்ந்தவர்.

சிறையில் தவம்: 1921 இல் வேலூர் சிறையில் ராஜாஜி எழுதிய நாட்குறிப்புகள் 'சிறையில் தவம்' என்ற தலைப்பில் நூல் வடிவில் வெளிவந்தன ஆங்கிலத்தில் எழுதிய இந்நூலை அறிஞர் திரிகூட சுந்தரம் பிள்ளை அழகு தமிழில் ஆக்கித் தந்தார். உள்ளங்களோடு உறவாடி, உண்மையை எட்டிப்பிடிக்கும் உயர்ந்த உரையாடலே இந்நூலாகும்.

காந்தியடிகளுக்குக் கடிதம்: சிறைக்கோட்டம் புகுந்த நாளன்றே காந்தி அடிகளுக்கு எழுதிய கடிதத்தில் தான் விடுதலைபெற்று வெளியே வருவதற்குள் நாடு விடுதலை அடைந்துவிடும் என்று எழுதினார். ராஜாஜி நிர்ணயித்த கெடுவுக்கு 25 ஆண்டுகளுக்குப் பின்பே சுதந்திரம் கிட்டியது.

சிறை நிகழ்ச்சிகள்: அரசியல் கைதிகளைப் பிச்சைக் காரர்களைப் போல் நடத்துவதைக்கண்டு நொந்து "இதன் மூலம் நம்மைப் பணியவைக்க முடியாது" என்றார். தாங்கள் மட்டுமன்றித் தேசமக்கள் அனைவரும் சிறைப்பட்டிருப்பதைக் குறிப்பிட்டார். தனக்குக் கைதிப்பட்டயம் தந்தபோது "என்னை ஆற்றலுடையவனாக ஆக்கிக் கொள்வதற்கான சந்தர்ப்பம்" என்று எழுதினார். சிறை உணவின் தன்மை, உணவிலும் அமைந்த ஜாதிப்பிரிவு, மருத்துவரின் கல் நெஞ்சம் போன்றவற்றை எடுத்துரைத்தார். "மைராட்டினம் அமைதியும் அழகும் நிறைந்த கவிதையாக இருக்கின்றது இருட்டிய பின்னர் குறள் வாசித்தேன்" என்று கூறினார். குழம்பு என்ற பெயரில் கழுநீரை ஊற்றிக் காய்ச்சி, கைதிகள் உணவுக்கென ஒதுக்கப்பட்ட பணத்தையும் கையாடல் செய்த அதிகாரிகளின் கயமையை அவர்கடிகின்றார் சுதந்திர நாட்டிலும் இந்திய அதிகாரிகளால் இவ்வியல்பு தொடரும் என்று சலித்துக் கொள்கின்றார்.

முடிவுரை: ராஜாஜியின் 'சிறையில் தவம்' அரசியல் வேட்கையையும் ஆன்ம தாகத்தையும் அழகாகச் சித்தரிக்கும் அற்புதப் படைப்பு, இன்றைய இளைஞர் சமுதாயத்துக்கு நாம் விட்டுச்செல்லும் விலை மதிப்பற்ற சொத்து கொள்கை உறுதியும் ஆர்வத்துடிப்பும் நிறைந்த அன்றையத் தியாகிகளின் பேச்சும் எழுத்தும்தான்.

---

## நாடகங்களிலும் கதைகளிலும் நாட்டுப்பற்று.

## 31. ஆர்யசபா

முன்னுரை: "நாடக அரங்குகள் பாமர மக்களின் பல்கலைக் கழகம்" என்றார் கவிக்குயில் சரோஜினி. விடுதலைப் போரில் தமிழ் நாடகத் துறைக்குப் பெரும் பங்கு உண்டு. முதல் தமிழ்த் தேசிய நாடகம் தமிழ்ப்

பண்டிதர் ச. கோபாலாச்சார் 1894இல் எழுதி வெளியிட்ட 'ஸ்ரீ ஆர்யஸபா' என்பதாகும்.

அறிமுகம்: முதற் காட்சியில் சூத்ரதாரன் ப்ரவேசம் செய்கிறான், இறை வணக்கத்துக்குப்பின் விதூஷகனும் அவன் மனைவியும் வருகிறார்கள். விதூஷகன் "தமிழ், ஆர்யம், ஆங்கிலம் அறிந்த கோபால வேதியரால் நாடகம் இயற்றப்பட்டது" எனக் கவிதையில் கூறுகிறான். ஐக்கியம், பொது நலம் ஓங்க, தீமைகள் நீங்க, காங்கிரஸ் சபை வளர நடத்தப்படுவதாக நாடகத்தின் நோக்கத்தையும் அவன் விளக்குகின்றான்,

நாடக அமைப்பு: நாடகம் ஐந்து அங்கங்கள் கொண்டது. ஒவ்வோர் அங்கத்திலும் இரண்டு களங்கள். பாத்திரங்கள் நடுவே நடக்கும் உரையாடல் மூலமாகவே காங்கிரஸ் அமைப்பின் நோக்கம், அதன் பணியின் சிறப்பு, அது கோரிய அரசியல் சீர்திருத்தங்கள் ஆகியவை பற்றி விளக்கப்படுகின்றது. பிரசாரத் தெளிவுடைய இந்நாடகத்தில் கதை அம்சம், நிகழ்ச்சிகள் வேகம், விறுவிறுப்பு முதலிய நாடக நயங்கள் இல்லை.

நகைச்சுவை: கதையம்சமில்லாததால், நகைச்சுவை, இசைப்பாடல்கள், காட்சி வர்ணனைகள் முதலியன அமைந்திருக்கின்றன. சூத்ரதாரியைப் பங்கா இழுப்பவனுடன் ஒப்பிடுவதும், வேதமூர்த்தி விசுவேசுவர சாஸ்திரிகள், சுந்தரேச குருக்கள், ஸோமயாஜி சுப்ரமணிய தீக்ஷிதர், ஆழ்வார் ஐயங்கார் ஆகியோர் பெயர்களும் பேச்சும் சிரிப்பை மூட்டுகின்றன. குருக்கள் 'ஐயா சாஸ்திரிகளே' எனக் கூப்பிட ஆழ்வார் ஐயங்கார் 'சாஸ்திரியுமாச்சு பினாஸ்திரியுமாச்சு, என்று சலித்துக் கொள்கிறார். சைவ பக்தர் சுப்பா சாஸ்திரியாருக்கும் வைணவ பக்தர் அப்பளாசாரியாருக்கும் நடக்கும் உரையாடலும் சிரிக்க வைத்துச் சிந்திக்கத் தூண்டுகின்றது.

காட்சி வருணனை: காட்சி வர்ணனை நயத்துக்கு விதூஷகன் தன் மனைவியிடம் தீட்டும் வசந்தகாலச் சொல் ஓவியம்.

நல்லதோர் எடுத்துக்காட்டு: குளங்களைக் குறிப்பிடும் போது 'ஸாதுக்கள் இருதயம் போல் தெளிந்தும், அவர் வசனம் போல் குளிர்ந்தும், அவர் செல்லும் அர்த்தம் போல் ஆழ்ந்தும் பரந்துமுள்ள தடாகங்கள்'' என்று கூறுவது நயமுடையதாகும்.

நாடகத்தின் தமிழ் நடை: ''எந்த எந்தச் சந்தர்ப்பங்களில் எவ்வித வார்த்தைகளைப் பிரயோகிக்க வேண்டுமோ அவற்றை அமைத்ததாக சூத்ரதாரி வாயிலாக ஆசிரியர் கூறுகின்றார். வடமொழிச் சொற்களும், ஆங்கிலச் சொற்களும் மிகுதியாகக் கலந்துள்ளன. நான்காம் அங்கம் இரண்டாம் களக்காட்சி லூகி, ஜான் என்ற இரு ஆங்கிலேயருக்கிடையே நடக்கும் உரையாடல் இக்காட்சி முழுவதும் ஆங்கிலத்தில் வரையப்பட்டுள்ளது. இத்தமிழ் நாடகத்தில் சிறிது தமிழும் இருந்தது என்று ஆறுதல் அடைய வேண்டியிருக்குமோ என்று எண்ணத் தோன்றுகிறது. சில இடங்களில் வளமான, செம்மையான தமிழ் நடை நம்மை வியப்பில் ஆழ்த்துகிறது பன்மொழிகளின் ஜலதரங்கமாக அமைந்த இந்நாடகத்தில் செழுமையான தமிழ் நடையும் ஆங்காங்கு காணப்படுகிறது.

தேசிய உணர்வு: மக்கள் கருத்தை மதிக்கும் சட்ட மன்றங்கள்; ஜூரி விசாரணை; வரிப்பளு குறைத்தல்; நிர்வாகத்துறையிலிருந்து நீதித்துறையைப் பிரித்தல்; ஆய்வுக்குழு அமைத்தல் ஆகிய கோரிக்கைகள் நாடகத்தில் அமைந்துள்ளன. ஐரோப்பியரை இந்திய நீதிபதிகள் விசாரிக்கக் கூடாது என்பதைக் கண்டிக்கிறது. சாதிசமய வேற்றுமைகளை மறந்து நாட்டுத்தொண்டாற்ற 'ஹிதகர்' அழைப்பு விடுகின்றார். ''தென்னாட்டு மக்கள் ஆரம்ப சூரர்கள். ஏதாவது ஒன்றைச் செய்ய ஆரம்பித்தாலும், பிறகு போகப்போக ஊக்கம் அழிந்து எடுத்த காரியத்தை விட்டுவிடுகிறார்கள்'' என்ற அவச்சொல்லை ஸமர்த்தர் மூலம் குத்திக் காட்டி உறுதியுடனும் துணிவுடனும் செயலாற்ற ஊராரை வேண்டுகின்றறார்.

முடிவுரை: மக்கள் ஒன்றுபட்டு பொதுநலனில் ஈடுபாடு உற்று, தெளிவும் திறனும் கொண்டு உறுதியும் ஊக்கமும பூண்டு, நாடு சிறக்கச் செய்பப்பாடுபடுவதற்குரிய அழைப்பு விடுபது 'ஆர்யசபா' என்ற முதல் தமிழ் தேசிய நாடகம்.

---

## 32. கதரின் வெற்றி

முன்னுரை: தொழில் முறையாக நடிக்கப்பட்டு, நல்ல நாடகமாக மக்களால் வரவேற்கப்பட்டு, கருத்துப்பரப்புப் பணியிலும் கனிந்த வெற்றி கண்ட தேசிய நாடகம் சதாவதானம் திரு தெ பொ. கிருஷ்ணசாமிப் பாவலரால் எழுதப்பட்டு 1922இல் அரங்கேற்றப்பட்ட 'கதரின் வெற்றி' என்ற நாடகமாகும்

காதலர் உரையாடல்: இந்நாடகத்தில் கதாநாயகன் சுந்தரம், கதாநாயகி மரகதத்துடன் உரையாடும் காட்சியும் கொள்கைப் பிரசாரமாக அமைந்துள்ளது. சுந்தரம் கதராடை புனையுமாறு மரகதத்திடம் கூறுகிறான். மரகதம் பதினாறு முழப்புடவை உடுத்துவது கடினம் என்பதை எடுத்துக் கூறுகிறாள். சுந்தரம சரிகையிட்ட புடவைகள் கனமில்லையா? தங்கநகைகள் கனமில்லையா?" என வினவினான். "ஆண்டுதோறும் எழுபது கோடிக்குமேல் வெளிநாட்டாருக்குக் கொடுக்கும் அன்னிய ஆடையை நீக்கிக் கதரணிய விழைந்தேன். தந்தை சினத்திற்கு அஞ்சி உடுத்தவில்லை" என்று மரகதம் கூறினாள்.

மாமனும் மருமகனும்: சுந்தரத்திடம் அவன் மாமா சம்பந்தர் "காந்திபபேய் உன்னை நன்றாகப் பிடித்துக் கொண்டது. அவர் வார்த்தையில் மயங்கிய வாலிபர்கள் சிறையில் வாட, அவர்கள் குடும்பத்தார் வெளியிலிருந்து திண்டாடுகின்றனர். ஏனென்று கேட்பாரில்லை" என்று புத்திமதி கூறினார். சுந்தரம் ஆவேசத்துடன் கூறும் பதில் சாரமும் பிரசாரமும் கலந்து நிற்கின்றன. "இலட்சக்கணக்கான ரூபாய்களுக்குத் துணிகளை ஏற்றுமதி

செய்து கொண்டிருக்க நாம் வெளி நாட்டிலிருந்து உடையை எதிர்பார்ப்பது அவமானமல்லவா? வெளிநாட்டுத் துணிகள் வருவது நின்றால் நாம் நிர்வாணிகளாயிருப்பதா?'' எனப் பதில் கூறினான். அதற்கு ''நம்முன்னோர்கள் மரவுரிதரித் திருந்ததை ஒருவன் ஆதரிக்கச் சொன்னால் நீ மரப்பட்டை அணிவாய்போலும்'' என்று மாமனார் நையாண்டி செய்கிறார்.

நாடகத்தின் முடிவு: மாமன் மனம் மாறி மரகதத்தை மணந்து கொள்ளுமாறு சுந்தரத்தை வேண்டுகிறார். அப்போது சுந்தரன் மாமாவிடம் திவான்பகதூர் பட்டத்தைக் கைவிடுமாறு கூறுகிறான். இரண்டு இலட்சம் செலவு செய்து பெற்றும் பயனில்லாத பட்டத்தை வாபஸ் செய்வதாக மாமா கூறுகிறார். சுந்தரம் தன் திருமணம் கதர்க் கல்யாணமாக நடக்க வேண்டுமென்றும், கதர்கட்டப் பிரியமில்லாதவர் திருமணத்திற்கு வரக்கூடாது எனக்கூறுகிறான். பரதேசத்துணி கண்டனத்துடன் முடியாமல் பாயாசத்துடன் நாடகம் முடிகிறது

கருத்தும் நடையும்: கருப்பொருளான கருத்தைச்சுற்றி, சொற்பொழிவுகளைப்புகுத்தாமல், கதைப்போக்கில் கருத்துப்பரப்புக்கு உரிய இடம் தந்து, பாத்திரங்களுக்கு ஏற்ற பேச்சுக்களை அமைத்து பல்சுவைக்கும் விருந்தளிப்பதாக நாடகம் அமைந்துள்ளது. ஸ்ரேஷ்டம், க்ஷேமம், போஜனம், வாபஸ் போன்ற சொற்கள் கையாளப்பட்டாலும் நாடகம் முழுவதும் நிலவி நிற்கும் எளிமையான வலுவான தமிழ்நடைக்கு ஊறு செய்வதாகச் சொல்ல முடியாது.

அனுமதி மறுப்பு: 1922 சென்னை ராயல் தியேட்டரில் பரபரப்பாக விளம்பரங்கள் செய்து சிறப்பான ஏற்பாடுகள் செய்யப்பட்டபின் நாடகத்திற்கு அரசாங்க அனுமதி கிடைக்கவில்லை. மாநில ஆளுநரை அணுகி சாரணர் இயக்கத் தொடர்பைப் பயன்படுத்தி பாவலர் அனுமதி பெற்று நாடகத்தை நடத்தினார். ''சீரான இந்தியாவில்'' எனத்தொடங்கும் பாடலை மரகதம் பாடிய போதெல்லாம் அரங்கில் எழுந்த ஆரவாரம் அடங்கப் பல நிமிடங்களாயின.

நாடகத்தின் சிறப்பு: நாடகத்தைப் பார்த்தவர்களில் சிலர் அக்கணமே அரங்கம் ஏறி "எனக்கும் ஒரு கதராடை தாருங்கள்; அந்நிய ஆடையைத் தீக்கிரையாக்குவேன்" என்றனர். வழுக்கி விழுந்த பெண் திருந்தி நாட்டுப் பணியில் ஈடுபட்டு நன் மதிப்புப் பெறுவதாக ஐம்பது ஆண்டுகட்கு முன் படைத்தது துணிச்சலானதாகும் இந்நாடகம் லண்டனிலும் நடத்தப்பெற்றது.

முடிவுரை: பாவலரின், பதிபக்தி, பம்பாய்மெயில், கவர்னர்கைப் போன்ற நாடகங்கள் கதரின் வெற்றியைப் போல தேசிய உணர்வைப் பரப்ப நேரடியாகப் பயன்படாவிடினும், குடிப்பழக்கம், சூதாட்டம் ஆகிய கொடுமைகளை எதிர்த்துப் போராடிய அளவுக்கு மக்களிடையே பொறுப்புணர்வையும், உரிமை உணர்வையும் பரப்பின.

---

## 33. பாணபுரத்து வீரன்

முன்னுரை: தேசியத் தமிழ் நாடகங்களில் மக்களால் பெரிதும் வரவேற்கப்பட்ட நாடகங்களுள் வெங்களத்தூர் சாமிநாத சர்மா எழுதிய 'பாணபுரத்து வீரன்' என்னும் நாடகமும் ஒன்று. 'ராபர்ட் ப்ரூஸ்' வாழ்க்கையை ஆதாரமாகக்கொண்டு ஆக்கப்பட்டது இந்நாடகம் ஆங்கில அரசினரால் தடை செய்யப்பட்டதால் சிற்சில பகுதிகளை மாற்றியும் திருத்தியும் ஆசிரியர் வரைந்து தந்ததை 'தேசபக்தி' என்ற பெயரில் டி கே.எஸ் சகோதரர்கள் பலமுறை வெற்றிகரமாக நடத்தினர்.

நிழற்படம்: ஆங்கில ஏகாதிபத்தியத்துடன் இந்தியா நடத்திய போராட்டத்தை நிழற்படம்போல் இந்நாடகம் காட்டியது. பகத்சிங், சுகதேவ், ராஜகுரு ஆகியோர் தூக்கிலிடப்பட்டுச் சில நாட்களே சென்றிருந்த சூழ்நிலையில் வாலீசன் தூக்குமேடை ஏறிய காட்சியில் நாடகம் பார்த்தவர்கள் 'பகதசிங்குக்குஜே' என்று முழக்கமிட்டனர்.

'தேசபக்தியே முக்தியாம், தெய்வசக்தியாம்' என்ற புரேசன் பாடிக்கொண்டு வரும்போது மக்கள் ஆரவாரிப்பர்.

நாடக வெளியீடு: 1921-ஆம் ஆண்டு ஜூன் மாதம் தொடங்கி, இந்நாடகத்தில் நான்குகளங்கள் வரை, திரு. வி. க வின் நவசக்தி இதழில் 'நாடகாசிரியன்' என்ற புனை பெயரில் வெளிவந்தது, பின்பு 1924-இல் முழுமையாக வெளிவந்தது. பின்னர் பண்டிதை அசலாம்பிகை அம்மை முகவுரையுடன் நூல் வடிவில் வெளியிடப்பட்டது.

அசலாம்பிகையார் பாராட்டு: பண்டிதை அசலாம்பிகையார் தாம் எழுதிய முகவுரையில், "சுயநலமாகிய கற்களையும், பொய்மையாகிற முட்களையும், புரட்டியுருட்டி சுதந்திரப் பேராறு பெருக்கெடுத்தோடிவரும் நாளில் இத்தகைய தேசப்பற்றினை வளர்க்க வல்ல நூல்கள் இன்றியமையாதன" என்று எடுத்துக்காட்டுகின்றார்.

வாலீசன் வாக்குமூலம்: முதல் அங்கத்தின் முதற் களத்தில் ஈசானபுர நீதி மன்றத்தில், விசிப்பிரபுமுன் வாலீசன் வாக்குமூலம் கூறுவதாகக் காட்சி முழுவதும் அமைந்துள்ளது "இவ்வுலகம் கடவுளால் படைக்கப் பட்டது, ஏழைகளையும், தேசாபிமானிகளையும், பிறரைக் குழைப்பவர்களையும் இவ்வுலகைவிட்டு ஓட்டிவிட கடவுள் உத்தரவு செய்யவில்லை. இருளிடங்களில் பாம்பும், தேளும் வசிப்பதுபோல், தேசபக்தியில்லாதவனிடத்து வஞ்சம், பொய், சூது, பொறாமை முதலிய தீக்குணங்கள் குடி கொண்டிருக்கும் என்பது நிச்சயம். தேசபக்தி குற்றத் திற்காகத் தண்டிக்கப்பட்டால், அத்தண்டனையினின்றும் விடுதலையானபின் மறுபடியும் அக்குற்றத்தையே யான் செய்வேன்" என்று தாய்நாட்டு விடுதலைப் போராட்டத் துன்பத்தையே பெரிதும் வரவேற்பதாக உளமுருகிக் கூறு கிறான். இறுதியில் நீதிபதி மரண தண்டனை விதிக்கையில் "தேசாபிமானம்—மரண தண்டனை! எவ்வளவு நெருங்கிய சம்பந்தம்" என்று வாலீசன் சொல்கையில் திரை விழுகிறது.

உரையாடல்கள்: இரண்டாம் அங்கம் முதற்களம்; வாலீசனுக்குப்பின் பாணபுரத்து வீரனாக விளங்கும் நாடகத் தலைவன் புரீசனுக்கும் அவன் நண்பன் நாகநாதனுக்கும் இடையே உரையாடல் அமைந்துள்ளது இவ்வுரையாடலில் புரீசன் சுதந்திர உணர்வில்லாச் சடங்களை மனமிலிகள் அறிவிலிகள் எனச் சுட்டெரிக்கிறான். நாடகத்தில் காதல் உரைகள் கேலிப் பேச்சுகள் முதலியனவும் அமைந்துள்ளன சுதர்மை தன்னை மறந்தாலும் தாய் நாட்டை மறக்கவேண்டாம் என்று வேண்டும் வீரப் பெண்ணாக விளங்குகின்றாள். சுதர்மையும் அவள் மகள் அனலையும் ஈசான புரச் சிறையில் அடைக்கப்படுகின்றனர் அரசன் சிறைக்கு வரும்போது சிறிய மகள் கேட்கும் கேள்விகள் உணர்ச்சிப் பெருக்கை உண்டாக்குகின்றன.

நாட்டு நடப்பு: புரீசன் சிலந்திப்பூச்சி ஆறுமுறைதவறி ஏழாவது முறையாய் ஏறும் உறுதிகண்டு இறுதி முயற்சி செய்ய உந்தப்படுகிறான். ஐந்தாம் அங்கம் இரண்டாம் களத்தில் அகிரத அரசனுக்கு, துருபதன் என்ற அமைச்சர் மட்டும் அறிவுரை கூறுகின்றார். "பாணபுரத்துக்கு நாம் செய்திருக்கும் அளவிறந்த நன்மைகளை ஞாபகப்படுத்திக் கொள்ள வேண்டும்" என்று கூறும்போது ஆங்கில ஆட்சி நன்மையை நினைவூட்டுகிறது அதற்குக் கூறும் பதில் உரிமையின் உயர்வை எடுத்துக் கூறுகிறது. இறுதியில் புரீசன் குறுகர. புனித பாரதநாட்டு விடுதலைப் போரில் வெற்றிபெறும் அறைகூவலாக அமைந்தது. "யாவர்க்கும் ஒரே சட்டம், பெண்ணுரிமை, வறுமை நீக்கம் வேண்டும்" என்ற சொல்லோவியத்துடன் நாடகம் முடிகிறது

முடிவுரை: ஐம்பது ஆண்டுகளுக்கு முன்பே சுதந்திர அடிப்படையில் சமதர்ம சமுதாயத்துக்குச் சாசனம் அமைத்துத்தந்த சாமிநாத சர்மா வாழி என்று நாமும் வாழ்த்த நாடகம் அழைக்கிறது.

# 34. தேசியச் சிறுகதைகள்

முன்னுரை: விடுதலைப் போராட்ட காலத்தில் படைக்கப் பெற்ற சிறுகதைகளை இலக்கியத் திறனாய்வு அடிப்படையில் ஆய்வு செய்தால், தமிழால் தேசியம் வளர்ந்ததை விடத் தேசியத்தால் தமிழ் வளர்ந்தது என்பது தான் ஏற்புடையதாய்த் தோன்றுகிறது. விடுதலை வேட்கை வளர்க்கும் சிறுகதைகள் மிகக்குறைவானவை.

குறைவுக்குக் காரணம்: போராட்டக் கதைகளை வெளியிட இதழ்கள் தயங்கியமையால், எழுத்தாளரின் உற்சாகம் குன்றியிருக்கக்கூடும். சிறுகதை தமிழில் அண்மையில் தோன்றியது. அதனால் சிறுகதை கலை வடிவும், தர உயர்வும், மெருகும் நிறைவும் பெறுவதற்குப் பலவாண்டுகள் ஆகியிருக்கலாம். இலட்சிய நிறைவும், கலை வடிவும் ஒருங்கே அமையப் பெற்ற சிறுகதைகள் எழுத அக்காலத்தில் பல எழுத்தாளர்கள் துணிவும் நம்பிக்கையும் கொண்டிருக்கவில்லை என்பது மற்றொரு காரணம்.

சிறுகதை முன்னோடி: பிரஞ்சு விடுதலைக்குப் போராடிய வீரப்பெண்மணி ஜோன் ஆப் ஆர்க் வாழ்க்கைச் சரித்திரத்தைத் தழுவி வ.வெ.சு. அய்யர் அவர்கள் எழுதிய மங்கையர்க்கரசி தமிழ்ச் சிறுகதை உலகில் முன்னோடியாக விளங்கியது மட்டுமல்லாமல், நாட்டுப் பற்றை ஊட்டுவதாகவும் அமைந்தது.

கல்கியின் சிறுகதைகள்: கல்கியின் சிறுகதைகள் தேசியத்திற்குச் சிறப்பான தொண்டு செய்தன. சிறை சென்ற தேசபக்தனைக் கதாநாயகனாகவும், சமூக சேவை ஆற்றும் ஆர்வம் கொண்ட பெண்ணைக் கதாநாயகியாகவும் கொண்டு பின்னப்பட்டிருந்த இக்கதைகள் மக்களை ஆட்கொண்டன. 'தூக்குத்தண்டனை' 'பவானி பி.ஏ.பி.எல்.' 'கணையாழியின் கனவு' போன்ற கதைகள் சிறப்புடையன. ஆங்கில அன்னிய ஆட்சியின் இல்லறைத் தேவதைகளாகிய

சிறிய அதிகாரிகளின் கொட்டத்தை 'போலீஸ் விருந்து' 'புஷ்பப் பல்லக்கு' என்ற கதைகள் உணர்த்தின. 'பொங்குமாங்கடல்' என்ற கதையில் போராட்ட உணர்ச்சி பொங்கி வழிகிறது. ஆங்கில அதிகாரிகளைப் பழி வாங்கத் துடித்த புரட்சி வாதிகளை மையமாகக் கொண்டு இக்கதை அமைந்துள்ளது.

அகிலன் சிறுகதைகள்: அகிலன் எழுதிய ''தலை மறைவில்'' என்னும் கதை விடுதலைப் போரில் தலைமறைவாயிருக்கும் பக்கிரியின் கதையாகும் பிரசவ வேதனையில் வருந்தும் தாயுடன் மருத்துவ மனையில் குழந்தை உரையாடுவதாக அகிலன் கற்பனை செய்து புதுப்பாணியில் எழுதிய 'சிசுவின் குரல்' பொல்லாத உலகத்தைப் படம் பிடித்துக் காட்டுகிறது. இந்திய தேசிய இராணுவத்தில் போராடிய கணவர் மறைந்த செய்தி கேட்டு, தன் பணத்தையும் நகைகளையும் இராணுவ வீரர் குடும்ப நிதிக்குத் தந்து உயிர் நீத்த தியாகத்தைக் கூறுவது 'காணிக்கை' என்னும் கதையாகும். உடன் பிறந்தோரின் தியாகம் நாட்டின் விடுதலைக்கு உரமாக மண்ணில் மண்ணாகக் கலப்பதை 'இரத்தக்கலப்பு' உணர்த்துகிறது

சிறப்பு மிக்க சிறுகதைகள்: சி சு செல்லப்பா எழுதிய 'பிரார்த்தனை' என்னும் கதை தொண்டர்களின் வேள்வித் தீயைக் கனிவுடன் கூறும் அமர கதையாகும் கல்கியின் 'அமர வாழ்வு' நேத்தாஜியின் வரலாற்றோடு தொடர்புடைய அழியாக் கதையாகும். சி சு. செல்லப்பாவின் 'வந்தேமாதரம்' என்னும் கதை உலகறியச் சொல்ல அஞ்சும் நிலையைப் படம் பிடித்துக் காட்டுகின்றது 'தீபிடித்த குடிசைகள்' என்னும் கல்கியின் கதை பெரிய மனிதர்கள் சுயநலத்தை முன்னிட்டுச் சிறுமைத்தனத்தில் ஈடுபடத் துணிவார்கள் என்பதை 'காலடிப் பிள்ளை' மூலம் காட்டுகிறது

சமூகச் சீர்திருத்தம்: விடுதலை இயக்கத்தோடு இணைந்த தீண்டாமை விலக்கு, மது விலக்கு போன்ற சமூக சீர்திருத்தங்களைப் பின்னணியாகக் கொண்டு பல கதைகள்

எழுதப்பட்டுள்ளன. 'புதிய நந்தன்' என்னும் புதுமைப் பித்தன் கதை சாதி சமயச் சிறையிலிருந்து மீள மறுக்கும் சமூகத்திற்கு ஒரு சவுக்கடியாகும். ராஜாஜியின் 'முகுந்தன்' என்ற நெடுங்கதை சாதிக் கொடுமையைச் சாடி அன்புணர்ச்சியை உருக்கமாகச் சித்தரிக்கிறது 'பதச் சோறு' என்னும் பி எஸ். ராமையாவின் கதை காந்தியக் கொள்கைகளால் கவரப்பட்ட பெண்ணின் வாழ்க்கையே சத்திய சோதனையாக அமைந்ததை உருக்கமாகச் சித்திரிக்கிறது மது விலக்கை மையமாகக் கொண்டு எழுதப்பட்ட கதைகளில் கல்கியின் 'தெய்வயானையும்' இராஜாஜியின் 'திக்கற்ற பார்வதி'யும் சிறப்புடையன. நாரண துரைக்கண்ணனின் 'இராவணாகாரம்' காந்தியத் தொண்டர்கள் தேசியப் புரட்சியின் அம்சமாக நடத்திய கள்ளுக்கடை மறியலைக் கலையழகுடன் காட்டுகிறது. எக்காலத்திலும் நீதிக்குப் போராடுபவர் தாங்க வேண்டிய துன்பங்களின் பட்டியலை விரிக்கும் தொடர்கதையாக இக்கதை விளங்குகிறது.

முடிவுரை: விடுதலைப் போரில் சிறுகதைகளின் பங்கு சிறியதாயினும் சிறப்புடையதாக அமைந்திருந்தது அடிமை நாட்டில் அஞ்சாமல் எழுதி ஆர்வமூட்டிய சிறுகதை எழுத்தாளர்கள் என்றென்றும் நினைந்து போற்றத்தக்கவராவர்.



## 35. தேசபக்தன் கந்தன்

முன்னுரை: சுதந்திர உணர்வை வளமாக்கும் வகையில், ஆக்கப்பட்ட ஆரம்ப கால நாவல்களில் தனிச்சிறப்பு பெற்று விளங்குவது கே எஸ். வெங்கடரமணி எழுதிய 'தேச பக்தன் கந்தன்'. 'ஆங்கிலமாகிய வெல்லப்பாகின் சுவையில் ஆழ்ந்திருந்த எனக்குத் தாய்மொழியாகிய கொம்புத்தேனின் சுவை இப்போதுதான் புலப்படலாயிற்று' என்று 1932இல் வெளியான இந்நூலின் முன்னுரையில் ஆசிரியர் குறிப்பிடுகிறார்.

கதையின் தொடக்கம்: மாயூரம்—தரங்கம்பாடி இருப்பு பாதையின் சீமந்த புத்திரியாகத் தோன்றிச் செல்வமாய் வளர்ந்த ஆக்கூர்க் கள்ளுக்கடைக் காட்சியுடன் இந்நாவல் தொடங்குகிறது. குழந்தைகள் பள்ளி விட்டதும் மிட்டாய் கடைக்கு ஓடுவதுபோல, வயலிலிருந்து கள்ளுக்கடைக்கு ஓடி உழவே தொழிலாகவும், குடியே கொண்டாட்டமாகவும் உழைப்பாளிகள் உழன்றதை நாவலின் தொடக்க கட்டம் படம் பிடித்துக் காட்டுகிறது.

கதைச்சுருக்கம்: இங்கிலாந்தில் ஒன்றாய்ப் படித்த போதே ரங்கனும் ராஜேஸ்வரியும் காதலால் ஈர்க்கப்படுகின்றனர். நாடு திரும்பியதும் ரங்கன் துணைக்கலெக்டர் பதவி ஏற்கிறான். ராஜேஸ்வரி காந்தியடிகளின் தலைமையில் தேசியத் தொண்டில் ஈடுபடுகின்றாள். "பதவியிலிருந்து கொண்டே மக்களுக்குப் பணியாற்ற இயலாதா?" என்று ரங்கன் வாதாடுகிறான். "கோடியில் ஒருவராய் மகாத்மா தலைமை வகித்து, உழைத்து வரும் போது, சர்க்கார் உத்தியோகத்தை வகித்துப் பெட்டியடி ஆளாய்க் கணக்கெழுதி வருவது பாபமல்லவா!" என்று இடித்துக் கூறுகிறாள் இராஜேஸ்வரி; கலெக்டர் வேலையை விட்டு, காங்கிரசில் சேருமாறு உற்சாக மூட்டுகிறாள். இல்லாவிடில் ரங்கன் அதிகாரம் செலுத்தும் ஊரில் பணி செய்து சிறைப்படப்போவதாக சவால் விடுகிறாள். ரங்கன் ராஜேஸ்வரியுடன் லண்டனில் படித்து ஐ. சி. எஸ். தேறாது, பின்னர் அதைத் துறந்து நாட்டுக்குப் பணிபுரியத் துணியும் கந்தன் தரங்கம்பாடி மக்களிடையே பணியாற்றுகின்றான். அங்கு துணைக்கலெக்டராகப் பணிபுரிய வந்த ரங்கனும், அவனுடன் சிறிது காலம் தங்க வந்த ராஜேஸ்வரியும் கந்தனின் தொண்டினால் கவரப்படுகின்றனர். ரங்கன் பதவியிலிருந்து விலகித் தடையுத்தரவை மீறித் தரங்கம்பாடியில் கூட்டம் நடத்த முனைகிறான். போலிசார் சட்ட விரோதக் கூட்டத்தினர் மீது நடத்தும் தாக்குதலில் கந்தன் குண்டுக்குப் பலியாகிறான். ரங்கனும் ராஜேஸ்வரியும் சிறைத்தண்டனை விதிக்கப்படுகின்றனர்.

புதினத்தின் சிறப்பு: உருவழகும், உணர்ச்சிப்பெருக்கும் மொழிவளமும், நடைமெருகும், எண்ண எழுச்சியும், எழில் மிக்க இயற்கைக்காட்சிச் சித்திரங்களும் பொங்கி, இப் புதினத்தைப் பொலிவுறச் செய்கின்றன. ரங்கன், ராஜேஸ்வரி, கந்தன் ஆகிய பாத்திரங்களின் பேச்சில், அமைதியான ஆனால் அழுத்தமான தேசிய உணர்வு ஓங்கி நிற்பதைக் காண்கிறோம். "விழலுக்கு இறைத்த நீர் போலாகும் மக்கள் உழைப்பை வயலுக்கிறைத்த நீர் போலப் பயன்படும் வண்ணம் செய்பவல்லது ஸ்வராஜ்யமே" என்று இலக்கணம் வகுக்கிறாள் இராஜேஸ்வரி. 'ஆங்காங்கே குட்டையாய்த் தேங்கி நிற்கும் சுதந்திர ஊக்கமாகிய நீரைப் பேராறாகப் பெருகச் செய்ய முயல்கிறோம்'' என்று கந்தன் விடுதலை வேட்கைக்கு விளக்கம் தந்து வலுவூட்டுகின்றான். "பாரத நாட்டைப் புதுப்பிக்க, பழைய வெண்ணையில் உண்டாகும் புழுக்களை போன்றவர்களாகிய அரசியல் தரகர்கள் மேன்மேலும் உண்டாகாதவாறு அடியோடு தடுக்க வேண்டும்'' என்று கந்தன் அறிவுறுத்துகிறான்.

காட்சி வருணனைகள்: இப்புதினத்தில் கதையோடு ஒட்டி கருத்துக்கு வளம்தரும் காட்சி வர்ணனைகள் மிளிர்கின்றன அடையாற்றில் அசைந்து செல்லும் வெள்ளையர்களின் சுகவேட்டைச் சிறுபடகுகளைக் காணும்போது "மரக்கட்டையானாலும், வெள்ளையரின் இந்நாட்டுப் பரிபாலன வெளித்தோற்றம்போல் கம்பீரத்துடன் ஓடிக் கொண்டிருக்கும்'' என்று உவமை கூறுகிறார். கடலில் ஆறுகலக்கும் இடத்தில் கிடந்த மரக்கட்டை பற்றி "இம் மரம் நம் நாட்டுப் பாமர மக்களுக்கு ஒப்பானது. கடலலைகள் சுதந்திரக் கிளர்ச்சி. கட்டையை ஆற்றின் மேல் நோக்கி ஓடும்படி செய்வதுதான் தேசபக்தர்களின் தொண்டு'' என்று ஒரு பாத்திரத்தின் வாயிலாகக் கூறுகிறார். "மூன்றாம் வகுப்பிலுள்ள ஏழை மக்களின் சாபத்தால் அரசு அழிந்து போகும்'' என்றும் "நம் நாட்டில் பேச்சுக்குக் குறைவில்லை. ஐப்பசி மாதத்து மழைபோல் அளவின்றிப் பொழிகின்றோம்'' என்றும் கூறுகிறார்.

முடிவுரை: கதை வேகமும் கருத்து வளமும் களைகட்ட வீர உணர்வும் விடுதலை வேட்கையும் கொடிகட்ட, உள்ளன்பு உணர்ச்சிக்கு உறுதி ஊட்ட படிப்போரைக் கவர்ந்து படிப்பினைப் புகட்டும் தேசபக்தன் நாட்டுப்பற்று இழையோடிய நல்லதொரு புதினம்.

---

# 36. தியாக பூமி

முன்னுரை: கதையம்சம், கருத்துச்செறிவு, கவர்ச்சி உத்திகள், கொள்கை முத்திரை, நடையில் விறுவிறுப்பு, நகைச்சுவையின் பிடிப்பு, இலக்கிய எழில், இலட்சியப் பொலிவு, அனைத்தும் கொண்டு, பொதுமக்களிடை மிகுந்த பரபரப்பையும் ஆர்வத்தையும் கவர்ந்து காலத்தை வென்ற படைப்பாக விளங்கியது 'தியாக பூமி'.

கதை அமைப்பு: கதைப்பாத்திரங்கள் அன்றாட வாழ்வில் நம் கண்முன் தோன்றி விளையாடும் உயிருள்ள பிறவிகளாக உருவெடுத்துள்ளது, இப்படைப்பின் தனிச் சிறப்பு. தூய்மையில் பிறந்த துன்பத்தில் பதிந்த துணிவு, வெள்ளை மனத்தின் சின்னமாய் வெடுக்கென்று பேசும் வேகம், பாசம் இழையோட பரிதாபம் உறவாட, உண்மை அன்புக்கும் உரிமை உணர்வுக்கும் இடையே ஊசலாடும் உள்ளக் கிளர்ச்சி இவற்றின் மொத்த உருவமாய் முழுமை பெறுகிறாள் சாவித்திரி. தனக்கு வாய்க்கப் போகும் கணவனைக் கருத்தில் பூசை செய்கின்றாள். அருமை தெரியாத கணவனின் அலட்சியத்துக்கு ஆளாகி வெறுத்து ஒதுக்கப்படுகிறாள். காலச் சக்கரத்தின் சுழற்சியின் பயனாய் செல்வமும் செல்வாக்கும் பெற்று உமாராணியாக அவள் உருவெடுத்த பின், முன்பு வேண்டாத ஸ்ரீதரன், தாம்பத்ய உரிமை கோரி வழக்குத் தொடுக்கிறான். மனைவி ''நான் இவருக்கு ஜீவனாம்சம் கொடுக்கத் தயாராய் இருக்கிறேன்'' என்று நீதி மன்றத்தில் கூறும் போது, வேதனையும் வேகமும் அவள் சொற்களில் ஒலிக்கின்றன

சம்பு சாஸ்திரி: பக்தியையே மையமாகக் கொண்டு வாழ்க்கை நடத்தி வந்த சாவித்திரியின் தந்தை சம்பு சாஸ்திரி வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட சேரி மக்களுக்குத் தன் வீட்டு மாட்டுக் கொட்டடியில் இடம் தந்ததால் அக்ரகாரத்து ஆசாரவாதிகளின் ஆத்திரத்திற்கு ஆளாகிறார். அவருடைய பாத்திரம் கல்கியின் அற்புதப் படைப்புக்களில் ஒன்று. காந்திய நெறியில் கதர்ப்பிரச்சாரம் தீண்டாமை ஒழிப்பு பணிகளைச் செய்த சம்பு சாஸ்திரி உண்மையான தேசத் தொண்டுக்கு இலக்கணமாகத் திகழ்கிறார்

தீக்ஷிதர்: சம்பு சாஸ்திரியாரிடம் மங்கள வார்த்தை பேசி, அவர் சம்பந்தம் செய்துகொள்ளவிருக்கும் குடும்பத்திடம் பெண்ணைப் புகழ்ந்து, சூடான காபியைக் குடித்துவிட்டுக் குளிர்ந்த மனத்துடன் கிளம்பிச்செல்லும் தீக்ஷிதர், இன்றைக்கும் கிராமங்களில் நாம் சந்திக்கும் பிறவிதான். நெஞ்சிலே உறைந்த நஞ்சு நையாண்டியாய் வெளிப்படப் பேசும் தீக்ஷிதர் விஷமத்துக்கு வேதாந்த வேஷம் போட்டு விளையாடும் விபரீதப் பிறவியின் விகார வெளிப்பாடு

மாடுகள் உரையாடல்: சம்பு சாஸ்திரியின் வீட்டு மாட்டுக் கொட்டடியில் அரிசனங்கள் ஒதுங்கியபோது மாடுகள் மக்கள் இரைச்சல் போடுவதைப்பற்றி சலித்துக்கொண்டு இறைவன் அப்படி அவர்களைப் படைத்து விட்டார் என்று கூறுவது புதியதோர் உத்தியாகும்

தேசிய இயக்கத்தின் சாயல்: கதையின் பிற்பகுதியில் தான் தேசிய இயக்கத்தின் சாயல் படர்கிறது உமாராணியும் ஸ்ரீதரனும் இல்லறத்தில் உள்ளங்கலந்த உறவைக் காண இயலாத ஏக்கத்தில் சத்தியாக்கிரகப் போரில் பங்கெடுத்துச் சிறை செல்வது, கொள்கை உறுதியைக் காட்டுகிறதா, அல்லது குடும்பப் பிரச்சினையைத் தீர்க்க குறுக்கு வழியை மேற்கொண்டனரா? என்ற ஐயப்பாடு எழும் வண்ணம் கதை பின்னப்பட்டுள்ளது கதை ஓட்டத்தில் திடீரெனப் புகுத்தப்பட்ட ஒரம்சம்போல் தேசப்பற்று தொடர்பின்றித்

தொக்கி நிற்கின்றது. எனினும் வலுவான கதையம்சத்தாலும், வளமான நடையினாலும் இக்குறை தெரியாத வண்ணம் செய்துவிட்டது

முடிவுரை: தேசிய இலக்கியம் என்ற திறனாய்வுத் தராசில் தியாக பூமியை நிறுக்கும்போது, அதன் குறைபாடு தெரிகின்ற போதிலும், கதையம்சத்தின் காரணமாக கல்கியின் நிலையான படைப்புக்களில் ஒன்றாய் இது நின்று விடுகிறது.




+2 அழகர் தமிழ் உரை

ஆசிரியர்:

புலவர் சேது. இராமலிங்கம், எம்.ஏ., பி.எட்.,

வினா-விடை முறை

தேர்வுக் கண்ணோட்டத்துடன் தயாரிக்கப்பெற்றது

விலை ரூ. 7-50

தனிப்பிரதி வேண்டுவோர் ரூ. 7-50 M. O. செய்க.